# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
10.12.2006 ரூ.8.00
80 பக்கங்கள்



## "ஈழப் பிரச்னையில் இந்தியா தலையிட வேண்டும்"

- ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்

# மரம் இயற்கை நமக்களித்த வரம்

அதை பாதுகாப்பது நமது கடமை.
பதிலுக்கு நம் வீட்டு கதவுகளாகவும் ஜன்னல்களாகவும்
நம்மை நீண்டநாள் பாதுகாக்கும்.
மரத்திற்கு உள்ள தேவைக்கேற்ற உறுதி, அழகு, நம்பகத்தன்மை
வேறு எந்த பொருளுக்கும் இல்லை.

## Timber facts...

### IDEAL MOISTURE CONTENT



Timber retains its shape only when its moisture content is between 14 to 18%. Timber, even after 6 months of Air-Drying contains moisture between 30% to 50%. Kiln Seasoning as per IS Code 1141 alone can bring down the moisture to the ideal level.

### TERMITE PROTECTION

While it is common to apply wood preservative oil, maximum durability is achieved under pressure impregnation method by injecting CCB Chemicals as per IS code 401.



## TIMBER IS NO MORE A LUXURY

Treated Rubber Wood is Affordable. It is approved for Door, Window & Cupboards under IS code. 12896

Door is not a product of Mere carpentry. Use the wood only after Treatment & Seasoning. Even for Teakwood seasoning is a MUST. Take care Before you make your doors.

Contact:

**MAYURAM TIMBER**

257 G.S.T. Road, Tambaram,
Chennai 600 045 Phone: 22415297, 22411261

கல்கி 10.12.2006

✉ 'பெண்கள் பாதுகாப்புச் சட்டம்' என்பது தேவையான ஒன்று என்பதில் ஐயமில்லை. ஆனால் அதன் மூலம் அப்பாவிக் கணவர்களும், அவர்தம் குடும்பத்தினரும் பாதிக்கப் படக் கூடாது என்பதில் அரசும் நீதித் துறையும் கவனம் கொள்ள வேண்டும்.

**திருவாரூர், த.பரதன்**

✉ மூன்றெழுத்து நிறுவனத்தின் டி.வி.சுந்தரம் அய்யங்கார் பற்றிய செய்தியை, மூன் றெழுத்து இதழான 'கல்கி' வெளியிட்டிருப்பது தனிச்சிறப்பு.

**மதுரை, இரா.சக்கரபாணி**



# பலாச்சுவை...

✉ பலாப்பழத்தைப் பிளந்து அதன் உள்ளுறைச்சுளைகளை விடுவித்து உண்ண வழங்கியதைப் போல் நம்மாழ்வாரின் திருவிருத்தத்து உட்பொருளைச் சுகமாக அறியும் வண்ணம் புலப்படுத்தியுள்ளார் சுஜாதா!

**கோவில்பட்டி -2, ச.ஆதிகேசவன்**

✉ கடவுள் என்பதற்கு சுவாமி சுத்தானந்தா அவர்கள் பல உதாரணங்களின் மூலமாக விளக்கியிருப்பது மிக எளிமையாகவும், அருமையாகவும் இருக்கிறது.

**மதுரை, ஆர்.பிருந்தா**

✉ உலகிலேயே மிக அதிகமாக வரி விதிக்கும் நாடாக இந்தியா திகழ்வதைச் சுட்டிக்காட்டி.... நமது தேவை இன்றைய நிலையில் பொருளாதார ஆரோக்கியம் என்பதை வலியுறுத்திய தலையங்கம் பாராட்டுக்குரியது!

**திருவண்ணாமலை, என். சண்முகம்**

✉ இராமாயணம் போன்ற இதிகாசங்கள் வாழ்க்கை என்ற கடலில் இல்லம் என்ற கப்பல் நல்லறமாகச் செல்ல வழி காட்டும் 'கலங்கரை விளக்கங்கள்' என்று அருமையாகச் சொன்ன 'நன்றி, என்தாயே - நன்றி!' சிறுகதை ஜோர்!

**சிதம்பரம், என்.ராமசந்திரன்**

✉ சட்டம் பகுதியில் வந்துள்ள



'Protection From Domestic Violence Act-2005' என்பது ஆண்களுக்கு எதிரானது அல்ல என்று ஆண்களுக்குத் தெரிவிப்பதுடன், சட்டம் பற்றித் தெரியாத பெண்களுக்கு, இவ்வாறான சட்டங்கள் உள்ளன என்றும் உணர்த்துவது மிகவும் பாராட்டுக்குரியது.

**கோவை - 36, கிரிஜா ராகவன்**

✉ அரசியல்வாதி என்பதைவிட சிறந்த இலக்கியவாதியான காளிமுத்துவை நாம் இழந்துவிட்டோம் என்பது ஒரு சரியான மதிப்பீடு.

**சென்னை - 73, கே.வி.ராமன்**

✉ காசைப் பெரிதாக நினைக்காமல் கலா சாரத்தைக் காப்பவனே கலைஞன். 'கலைஞன்' சிறுகதை கண்ணீரை வரவழைத்தது.

**கிழவன் ஏரி, செ.சத்தியசீலன்**

✉ பருவ மழை முறையாகப் பெய்கிறதோ இல்லையோ பருவம் தப்பாமல் இந்தியா பாகிஸ்தான் பேச்சுவார்த்தை நடைபெறுகிறது. ஆனால் பலன்தான் பூஜ்யம் என்பதை அருமையாக கார்ட்டூன் மூலம் விளக்கியுள்ளீர்கள்.

**திருவாரூர், த.பரதன்**






# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் பொன்பைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**எம். மோகன்**
**ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :

ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# தீராத 'விளையாட்டுப் பிள்ளை!

தும்புரு

பி.கண்ணனின் வீணை கச்சேரிக்குப் போனால் பெரிய போனஸ் காத்திருக்கிறது - சிதார், கிடார், பியானோ, கீபோர்ட், புல்புல்தாரா, கொட்டாங்குச்சி வயலின் என்று அரை டஜன் வாத்தியங்களின் இசையைப் பொழிகிறார் (வீணையிலிருந்துதான்) மனிதர்! அவ்வப்போது கொஞ்சம் வீணையும் வாசித்தார்- ராக தரங்கிணிக்காக அவர் மயிலை சாஸ்திரி ஹாலில் செய்த கச்சேரியில்.

* கண்ணனுடன் ஏ.எஸ். ரங்கநாதன் - மிருதங்கம், பாபனாசம் சேதுராமன் - கஞ்சிரா, என்.சுந்தர் - மோர்சிங், மடிப்பாக்கம் முரளி- கடம்.




ஆரம்ப விறுவிறுப்புக்குத்தான் இப்படிக் கலர்ஃபுல்லாகக் கலக்குகிறார் என்று பார்த்தால் கண்ணன் விடுவதாயில்லை... பூர்வி கல்யாணியின் (மீனாக்ஷி மேமுதம் தேஹி) அமைதியான அழகையும் சிம்மேந்திர மத்யமத்தின் (ராகம்-தானம்-பல்லவி) கனமான கம்பீரத்தையும் அவரையுமறியாமலே அவர் 'விரல்கள் தடவிப் பரிமாறிய' போதுகூட அவற்றைத் தொடர விடாமல் திரும்பத் திரும்ப கபடி ஆட்டத்துக்கே இழுத்துப் போனார்- இந்தத் தீராத விளையாட்டுப் பிள்ளை!

'ஸ்பெஷல் எஃபக்ட்'களுக்காகத் தந்திகளைப் படாத பாடு படுத்தும்போது வித்தை வேண்டுமானால் மேலோங்கி நிற்கலாம்; ஆனால் சங்கீதம் அடியோடு சிதைந்து போகிறது. பக்க வாத்யக் கலைஞர்களும் அதே ரூட்டில் இழுக்கப்பட, கச்சேரி பிரபுதேவா டான்ஸாகிறது!

வர்ணம், வினாயகர் கீர்த்தனை என்று சம்பிரதாயமாக ஆரம்பித்து, ஹம்ஸநாதம் ஆலாபனையில் சில வளமான கற்பனைகளைப் பொழிந்தவர், மேல் ஸ்தாயிகளில் இனிமையைக் காவு கொடுத்தார். கீர்த்தனைக்குப் பிறகு (பண்டுரீதி - தியாகராஜர்) "வீணையில் நாமஸங்கீர்த்தனம்" செய்கிறேன் என்று பக்க வாத்தியக் கலைஞர்களுடன் சேர்ந்துகொண்டு ஒரு யுத்தமே செய்ய ஆரம்பித்துவிட்டார்! ஸ்ரீ தியாகராஜர் இக் கீர்த்தனையில் "ராமா, இராமபக்தன் என்ற முத்திரை வில்லும் ராம நாமம் என்ற போர்வாளும் என்னிடம் உள்ளன.... என்னை உன் சேவகனாக்கிக் கொள்" என்று விண்ணப்பிப்பது வாஸ்தவம்தான். அதற்காக கண்ணன் கச்சேரியையே போர்க்களமாக்குவது என்ன நியாயம்!

ஸல்லாபம் என்ற ராகத்தின் 'வரலாற்றை'யும் அந்த ராகத்தில் இயற்றிய தமது சொந்த சாஹித்யம் பிறந்து வளர்ந்த கதையையும் வர்ணிக்க கச்சேரி மேடையைப் பயன்படுத்தினார் கண்ணன். ரஜினி படத்து 'ரா ரா' இந்த ஸல்லாப ராகம்தான் என்றும் தமது கீர்த்தனை அதற்குப் பல வருடங்கள் முன்பாகவே இயற்றப்பட்டது என்றும் கூறி காப்பிரைட் பதிவும் செய்துகொண்டார்

கவனமாக! கண்ணன் வாசித்த 'சல்லாபம்' ராக கீர்த்தனையின் பல்லவி: காமாக்ஷி காமாகோடி பீட வாஸினி!

# மாசில் வீணை!

**மா**லை மதியம் பொழிந்தது; வீசு தென்றல் தவழ்ந்தது; வீங்கிள வேனில் இதமாகக் கவிந்தது; மூசுவண்டறை பொய்கையின் மென் குளிர்ச்சி அனுப விக்கக் கிடைத்தது- ஜெயந்தியின் 'மாசில் வீணை'க் கச்சேரியில்.

திருவான்மியூர் ஆஸ்திக ஸமாஜத்தில் நடைபெற்ற இந் நிகழ்ச்சியில் பிரதான கலைஞரின் மன ஓட்டத்தையும் கலைக் கண்ணோட்டத்தையும் அழகாகப் பின் பற்றித் தொடர்ந்தனர்- பக்க வாத்தியக் கலைஞர்கள் ர்மேஷ் (மிருதங்கம்), கார்த்திக் (கடம்). கச்சேரியின் மிருதுத் தன்மையை உணர்ந்து கார்த்திக் தமது ஒலி பெருக்கி யின் வால்யூமைக் குறைக்கச் சொன் னார் என்றால் பார்த் துக் கொள்ளுங்கள்!




கமாஸ் தரு வர் ணத்துடன் ஆரம்பித் தார் ஜெயந்தி. உடனே நளினமும் ரம்மியமும் அரங்கை ஆட்கொண்டு விட்டன.

கச்சிதமான கமகங்கள், உருகி ஓடும் சாஹித்ய பாவம், பிரமிக்க வைக்கும் மனோதர்ம சஞ்சாரங்கள் என்று கச் சேரியை வளர்த்துச் சென்ற விதத்தில் ஜெயந்தியின் ஈடுபாடு தொடர்ந்து வெளிப்பட்டது; வீணையை அவர் ஆட் கொண்டதைக் காட்டிலும் வீணை அவரை ஆட்கொண்டிருப்பது புரிந்தது.

ப்ரோசேவாரெவரே (ஸ்ரீ ரஞ்சனி) மேரு ஸமான (மாயாமாளவகௌளை), நாரத நாத (கானடா), கடைக்கண் வைத் தென்னை (பேகடை) என்று கனமான கீர்த்தனை களைத் தேர்ந்தெடுத்து அவற்றை மிக ரஞ்சகமாக வழங்கினார்.

பேகடை ஆலாபனை அம்பாளிடம் இறைஞ்சும் கீர்த்தனைக்குப் பொருத்த மான உணர்வுத் தளத்தை உருவாக்கி கண் பனிக்கச் செய்தது. "கௌரி, ராஜ ராஜேசுவரி, கருணாகரி, சிவசங்கரி விரி கடைக்கண் வைத்தென்னை ஆளம்மா" என்ற வார்த்தைகளை வாய்ப்பாட்டில் சிதைக்காமல் பாடுவதே பெரிய சவால் - அத்தனை வல்லின மெல்லின இடை யினங்களையும் வீணையில் உணர்வுப் பெருக்குடன் வாசித்தார் ஜெயந்தி.

ஸ்ரீ காந்திமதி இக் கச்சேரியின் பிர தான கீர்த்தனை. ஹேமவதி ராகம். ஏமாந்தால் இதில் வேறு ராக சாயல்கள் நுழைய காத்துக் கொண்டிருக்கும். ஜெயந்தி ஹேமவதியில் கோட்டை கட்டிக் காத்தார்.

தொடர்ந்த ராகமாலிகை ஸ்வரங்கள், மலரிதழ்களின் அடுக்குகளாகக் கவ்விக் கொண்டு மலர்ந்தன. அதுவரை வீணை யின் கன - நயங்களை ஒட்டியே வாசித்து வந்த பக்கவாத்தியக் கலைஞர்கள், தனியா வர்த்தனம் வரை காத்திருந்து ஓசை ஒலிகளை அளவாக வெளிப்படுத்தி னார்கள்.

படங்கள் : ஸ்ரீஹரி

**இட ஒதுக்கீடு, முல்லைப் பெரியாறு, உள்ளாட்சித் தேர்தல், இலங்கைப் பிரச்னை போன்றவற்றைத் தொடாமல் ஊடகங்களைப் பற்றி நம்மிடம் சாட்டையடியாகப் பேசினார் டாக்டர் ராமதாஸ். அவருடனான சந்திப்பிலிருந்து...**

**மக்கள் தொலைக்காட்சி எப்படி போய்க் கொண்டிருக்கிறது?**

(முகம் மலர்ச்சியடைகிறது.) "துவங்கிய நாற்பத்தைந்து நாட்களில் வித்தியாசமான நிகழ்ச்சிகளுடன் தமிழகத்தில் பரபரப்பாகப் பேசப்படுகின்ற தொலைக்காட்சியாகிவிட்டது. ஒரு வெற்றிடத்தை நிரப்பியிருக்கிறது அந்தத் தொலைக்காட்சி.

செய்திகளில் பா.ம.க. வாசனையாகவே இருக்காது. நம் பண்பாடு, கலாசாரம் ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்டு நிகழ்ச்சிகள் அமைகின்றன. காலையில் ஒளிபரப்பாகும் வில்லும் சொல்லும், தேவாரம், ப்ரபந்தம் ஆகிய நிகழ்ச்சிகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது.

தொலைக்காட்சிகள் பண்டிகை நாட்களில் சினிமாவைக் கட்டிக் கொண்டு ஆபாசத்தை அவிழ்த்துவிடுகின்றன. ஆனால் நாங்கள், நாட்டுப்புறக் கலைகள், தமிழகத்துக்கு, தமிழுக்குத் தொண்டு செய்தவர்களைப் பற்றிய நிகழ்ச்சிகளை ஒளிபரப்புகிறோம். எப்பேர்ப்பட்ட தொடராக இருந்தாலும், அது ஆறு மாதங்களுக்கு மேல் ஒளிபரப்பாகாது. மக்களை முட்டாளாக்கும் மெகா சீரியல்கள் கண்டிப்பாக இடம் பெறாது. பொழுதுபோக்கோடு புதிய செய்திகளைக் கொடுத்து மக்களின் அறிவை மேம்படுத்துவதாக இருக்கும். இதுதான் நோக்கம்.

அச்சு ஊடகமான தமிழ் ஓசை துவங்கியதன் நோக்கமும் இதுதான்! தெரிந்தோ தெரியாமலோ பத்திரிகைகள் தமிழ் மொழியைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்து வருகின்றன. இது தடுக்கப்பட வேண்டும். தமிழர்களின் வரலாறு, வீரம், கலாசாரம் ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் 'பொன்னியின் செல்வன்' போன்ற புதினத்தை எடுத்துக் கொடுத்தால் நாங்கள் வெளியிடுவதற்குத் தயாராக இருக்கிறோம்."

**சன் தொலைக்காட்சியில் பணி புரிந்தவர்களை உங்கள் தொலைக்காட்**





**சிக்கு அழைத்துக் கொள்கிறீர்களாமே?**

"நாங்கள் யாரையும் கூப்பிடுவதில்லை; அவர்கள் எங்களிடம் வாய்ப்பு கேட்கும் போது பயன்படுத்திக் கொள்கிறோம்."

**தொலைக்காட்சியைப் பொருளாதார அளவில் எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

"6000 நபர்களிடம் தலா 1000 ரூபாய் வசூலித்தோம். அதுதான் மூலதனம். தேவைக்கேற்றபடி தெரிந்தவர்களிடம் பணம் புரட்டுகிறோம். பொதுவாக, அரசிடமிருந்து தொலைக்காட்சிக்கு அதிக விளம்பரங்களை எதிர்பார்க்க முடியாது. ஓரளவுக்குத் தனியார் விளம்பரங்கள்

தலைமுறையே கெட்டுப் போய் விட்டது.

தமிழகத்தில் சினிமாதான் அரசியல், அரசியல்தான் சினிமா என்ற நச்சுக் கலவை வேரூன்றிவிட்டது. குறிப்பாக, பக்தவத்சலம் காலத்துக்குப் பிறகு இது நடந்து வருகிறது. கடந்த பத்து வருடங்களாக, ஆபாசப் படங்களுக்கு எதிராக நான் குரல் கொடுத்து வருகிறேன்.

**கஸ்தூரிராஜா என்ற இயக்குநர் இளைஞர்களின் மனத்தைக் கெடுக்கும் விதமாகவே படம் எடுத்து வருகிறார்.**

# "தலைமுறையைக் கெடுக்கிறது தமிழ் சினிமா..."

## –விளாசுகிறார் ராமதாஸ்

வருகின்றன. எந்தக் கஷ்டத்தையும் சமாளித்து, சாதனை படைப்போம்."

**சினிமா நிகழ்ச்சிகள் இல்லாமல் ஒரு தொலைக்காட்சியை நடத்துவது மிகுந்த சிரமம் அல்லவா?**

(கடுகடுப்பாகிறார்.) "சினிமா ஓர் அற்புதமான ஊடகம். ஆனால் சமுதாயத்தைக் கெடுப்பதற்கு அல்லவா தற்போது அது பயன்படுகிறது! காதல், பாட்டு - அதுவும் குத்துப்பாட்டு, சண்டைக் காட்சிகள் இல்லாமல் படம் எடுக்க வேண்டும். தமிழர்களின் ரசனையை மேலே கொண்டு செல்ல வேண்டும்.

இளைஞர்களின் மனத்தில் வக்கிர உணர்வைத் தூண்டி அதன் மூலம் பெட்டியை நிரப்பிக் கொள்ளும் மோடி வித்தைதான் இங்கு நடந்து வருகிறது. ஒரு

**'இது காதல் வரும் பருவம்' என்ற அவரது படத்தின் விளம்பரத்தைத் தொடர்ந்து அந்தப் படத்தை எதிர்த்துப் பெற்றோர்களிடமும் ஆசிரியர்களிடமும் கல்கி கையெழுத்து இயக்கம் நடத்தி வருகிறது. இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

"அதைப் போன்ற படங்களின் ஸ்டில்களை வெளியிட்டு ஆபாசத்தைக் காசாக்கும் பத்திரிகைகளுக்கு மத்தியில் கல்கியின் இந்தச் சமூகப்பணி பாராட்டத் தக்கது; வரவேற்கப்பட வேண்டியது. உங்கள் இயக்கத்துக்கு மேலும் பொது ஜன ஆதரவைத் திரட்டுவதற்கு என்னால் இயன்ற உதவியைச் செய்வேன்."

**- ப்ரியன்**

படம் : **ராஜன்**

# ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்

ஸ்ரீஸ்ரீ வருவதையொட்டி தமிழகமே அல்லோலகல்லோலப் படுகிறது. டிசம்பர் 4,5,6,7,8 ஆகிய நாட்களில் மன, உடல் வளம் பெருக்கும் பல நிகழ்ச்சிகள் ஸ்ரீஸ்ரீயுடன் ஏற்பாடாகியுள்ள நிலையில், பெங்களூர் ஆசிரமத்தில் அவர் கல்கிக்குப் பிரத்யேகப் பேட்டி அளித்தார்:

**த**மிழ்நாட்டில் பிறந்தவரான நீங்கள், பெங்களூரை உங்கள் ஆன்மிகப் பணிகளுக்கான மையமாகத் தேர்ந்தெடுத்தது ஏன்?

"அது இறையருளால் நிகழ்ந்தது. அதை என்னால், வார்த்தைகளால் விளக்க முடியாது. இந்த இடத்தைப் பார்த்தபோது, 'இதுதான் நமது பணிகளுக்கு உகந்த இடம்' என்ற எண்ணம் ஏற்பட்டது. இந்த இடத்தில் ஆசிரமம் அமைந்தது."

ஒரு சிறு குடிசையில் ஆரம்பமான உங்கள் அமைப்பு, இன்று சுமார் நூறு ஏக்கர் பரப்பில் விரிவடைந்து, உலகம் முழுவதுமாகப் பரவி நிற்கிறது.

# "ஈழப் பிரச்னையில்




இது எப்படிச் சாத்தியமானது?

"ஆரம்பித்தபோது இப்படி இப்படியெல்லாம் செய்ய வேண்டும், இந்த அளவுக்கு வளர்ச்சியடைய வேண்டும் என்று இலக்கு ஏதும் நிர்ணயித்துக் கொள்ளவில்லை. நாங்கள் எதைச் செய்யத் தொடங்கினோமோ, அதை முழுமையான ஈடுபாட்டுடன் செய்தோம். இன்று நாட்டில் நிறைய ஆசிரமங்கள் இருக்கின்றன. என்றாலும் அவை மனிதர்களை மேம்படுத்துவதில் கவனம் செலுத்துவது இல்லை. நாங்கள் கற்களைக் கொண்டு கட்டடங்கள் கட்டுவதைவிட மனிதர்களுக்கும் அவர்களின் மனவள மேம்பாட்டுக்கும் முக்கியத்துவம் கொடுத்தோம். மக்களுக்கு இங்கே முக்கியத்துவம் கிடைத்ததால், மேலும் மேலும் மக்கள்

EXCLUSIVE

இங்கே வர, இந்த அமைப்பு இந்த அளவுக்கு வளர்ச்சி கண்டுள்ளது. சிறு அளவில் நாங்கள் ஆரம்பித்தோம்; இன்று எங்களுக்கு உலகமே ஒரு சிறிய இடமாக, ஒரே குடும்பமாகத் தெரிகிறது."

**நாளுக்கு நாள் மக்களிடையே பக்தி அதிகரித்து வருகிறது; கோயில்கள் அதிகரித்து விட்டன; ஆனால் மக்களிடம் மகிழ்ச்சியும், திருப்தியும் இருப்பதாகத் தெரியவில்லையே! இது ஏன்?**

"பத்து ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிட நிறைய ஆஸ்பத்திரிகள் இன்று இருக்கின்றன. மருத்துவத்துறை இன்று மிகவும் முன்னேறியுள்ளது. அதனால் மக்கள் வியாதிகளே இல்லாமல், ஆரோக்கியமாக வாழ்கிறார்களா, என்ன? இல்லையே! அதைப் போலத்தான் மக்களிடம் பக்தி குறைந்து, கோயில்களுக்குப் போகாமல் இருந்தால் நிலைமை இன்னும் எவ்வளவு மோசமாக இருந்திருக்கும் என்று கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்! மக்களிடையே சண்டை, சச்சரவுகள், வன்முறை, மோதல்கள் அதிகமாகி, நாட்டில் அமைதி குலைந்து போகும்."

**அப்படியென்றால் உண்மையான ஆன்மிகம் என்பது எது?**

"ஆன்மிகம் என்பது வீட்டுக்குள்ளே பூஜை அறையில் உட்கார்ந்துகொண்டு ஆண்டவனைப் பிரார்த்தனை செய்வது இல்லை. அது, மனிதர்கள் அன்றாட வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டியது."

**நீங்கள் சமீப காலமாக மோதல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் இடங்களுக்குச் சென்று அமைதி முயற்சியில் ஈடுபட்டு வருகிறீர்கள். ஓர் ஆன்மிகவாதிக்கு இது தேவைதானா?**

"சுனாமியால் ஸ்ரீலங்காவின் வடக்குப் பகுதி பாதிக்கப்பட்ட போது அங்கே நிவாரணப் பணிகள் செய்ய நாங்கள் சென்றிருந்தோம். சுனாமி மட்டுமல்ல, அங்கே நிலவும் போர்ச் சூழ்நிலை அவர்களை எந்த அளவுக்குப் பாதித்துள்ளது என்று அப்போது எங்களால் தெரிந்துகொள்ள முடிந்தது. நாங்கள் சென்றபோது எண்பதாயிரம் மக்கள் கூடிவிட்டார்கள். அவர்கள் தாங்கள் படுகிற கஷ்டங்களை எங்களிடம் சொல்லி அழுதார்கள். 'இரவில் படுத்தால் நிம்மதியாகத் தூக்கம் வராமல் தவிக்கிறோம்' என்றார்கள். எங்களைப் பார்த்தவுடன் அந்தத் தமிழ் மக்கள் அனைவருக்கும் மிகுந்த மகிழ்ச்சி! 'இத்தனை ஆண்டுகளில், எங்களைப் பார்த்து ஆறுதலாக நாலு வார்த்தை சொல்ல ஓர் ஆன்மிக வாதியும் வந்ததில்லை. உங்களைப் பார்த்ததில் எங்களுக்கு மகிழ்ச்சி!' என்று கூறி கண்ணீர் வடித்தார்கள்.

எங்கள் அமைப்பைச் சேர்ந்தவர்கள் கடந்த சில ஆண்டுகளாக அங்கே பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும்கூட, சுனாமி பாதிப்புகளிலிருந்து இவர்களை மீட்க, உதவினால் மட்டும் போதாது; இந்த மக்களுக்கு நிரந்தரமாக அமைதி வேண்டுமே! அதற்கான முயற்சியில்தான் நாங்கள் இறங்கினோம். ஸ்ரீலங்கா அரசுடன் பேசினோம்; விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளிடமும் பேசினோம். தொடர்ந்து அந்த முயற்சி

# இந்தியா தலையிட வேண்டும்"

எஸ்.சந்திரமௌலி



* இலங்கையில்...

யில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.''

**ஈழத்தமிழர் பிரச்னைக்கு உங்களால் எப்படிப்பட்ட தீர்வினைக் காண முடியும் என்று கருதுகிறீர்கள்?**

''அமைதி நடவடிக்கைகளில் நாங்கள் ஈடுபட ஆரம்பித்த உடனேயே, ஏற்கெனவே அந்தப் பணியில் ஈடுபட்டுள்ள நார்வே அமைதிக் குழுவினர், எங்களிடம், ஸ்ரீலங்கா அரசாங்கத்தையும், புலிகளையும் பேச்சுவார்த்தைக்கு அழைத்து வந்து மேஜையில் அமர வைக்க எங்களால் முடியும்; ஆனால், பேச்சுவார்த்தை வெற்றி பெற்று, தமிழ் மக்கள் பிரச்னை தீர வேண்டுமென்றால், இரு தரப்பினருக்கும் நிறைய மனமாற்றம் ஏற்பட வேண்டும். அந்த மனமாற்றத்தை உங்களால் மட்டுமே கொண்டு வர முடியும் என்று குறிப்பிட்டார்கள். இரு தரப்பினருக்கும் மனமாற்றத்தை ஏற்படுத்தி, நல்லதொரு தீர்வினைக் காண முடியும்' என்று நாங்கள் திடமாக நம்புகிறோம்.

புலிகளும் சரி, ஸ்ரீலங்கா அரசாங்கமும் சரி இந்த விஷயத்தில் இந்திய அரசாங்கம் ஒரு முக்கிய பங்காற்ற வேண்டும் என்று விரும்புகிறார்கள். அந்தக் கருத்தை இந்தியா ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. ஈழப் பிரச்னையில் இந்தியா தலையிட்டால், பிரச்னை தீருவதற்கு வாய்ப்புகள் அதிகம். அதற்காக நாங்கள் இந்தியாவில் மத்திய அரசுடன் பேச முயற்சி கள் செய்தோம்; ஆனால் அது முடியவில்லை. இந்தியா ஒதுங்கி இருந்து விட்டால் வேறு சில நாடுகள் உள்ளே புகுந்து ஆதாயம் தேட முற்படலாம்.''

**இந்தப் பேச்சுவார்த்தையில் இந்தியா தலையிடாத நிலைப் பாட்டை ஏன் தவறு என்கிறீர்கள்?**



* ... அச்சுறுத்தல்!

''இளமைத் துடிப்பான நம் இராணுவத்தினர் இரண்டாயிரம் பேரை நாம் கார்கில் போரில் இழந்திருக்கிறோம்; அதற்கு முழு முதற்காரணம் முஷாரஃப்தான். ஆனாலும், நாம் அவருக்குச் சிவப்புக் கம்பளம் விரித்து, அவருடன் காஷ்மீர் பிரச்னைக்காகப் பேச்சுவார்த்தை நடத்தவில்லையா? அதைப்போல, கசப்பை ஒதுக்கிவிட்டு இலட்சக்கணக்கான தமிழ் மக்களின் அமைதியான வாழ்க்கைக்காக நாம் ஏன் ஸ்ரீலங்கா விஷயத்தில் தலையிட்டு அமைதிக்கு வழி வகுக்கக்கூடாது?''

அட்டை மற்றும் படங்கள் :
**பொள்ளாச்சி சுந்தரம்**

**அயோத்தியா பிரச்னை, தீவிரவாதம், பெருகி வரும் தற்கொலை, மரண தண்டனை, போலிச் சாமியார்கள் என்று மேலும் பல கேள்விகளுக்கு குருஜி அளித்த பதில்கள் அடுத்த வாரம்...**

# ஒரு ஜென்மம்

- அருண் பிரகாஷ்

இசைக் கலைஞர்கள் எப்போதும் உடம்பையும், மனதையும் தயார் நிலையிலேயே வைத்திருக்க வேண்டும். உணவு விஷயத்தில் கொஞ்சம் அலட்சியமாக நடந்துகொண்டால், அது கச்சேரியின்போது தொந்தரவுகளைத் தரும். எந்த நேரமும் கச்சேரிக்கு அழைக்கப்படலாம் என்ற நிலையில் உடல் நலத்தைப் பேணுவது மிக மிக முக்கியம்.

நாம் நினைப்பது கையில் (வாசிப்பில்) வரவேண்டுமென்றால், மனம் அமைதியாகவும், புத்துணர்ச்சியோடும் இருப்பது அவசியம்!

அந்த வகையில் நான் உடல் நிலையையும், மனோநிலையையும் ஒருவித நிதான கதியில் வைத்துக்கொள்கிறேன்.

காலையில் ஆறு மணிக்கு எழுந்தவுடன் ஒரு லிட்டர் தண்ணீர் அருந்துவேன். 30-40 நிமிடங்கள் சுறுசுறுப்பான நடை. பிறகு சிற்றுண்டி.

ரயில்வே துறையில் பணியாற்றுகிறேன் என்பதால் மதிய உணவை வீட்டிலிருந்து எடுத்துக் கொண்டு செல்கிறேன். சிறிதளவு அரிசிச் சாதம், காய்கறிகள். இடையிடையே ஓட்ஸ் கஞ்சியையும் கொண்டு போவது உண்டு. மந்தத் தன்மையை ஏற்படுத்தும் என்பதால் அரிசி வகை உணவுகளைப் பெரும்பாலும் தவிர்த்து விடுவேன்.

இரவு எந்த உணவானாலும் குறைந்த அளவே எடுத்துக்கொள்வேன். எட்டு மணி நேரத் தூக்கம். இதுவே எனது நடைமுறை வழக்கங்கள். காபி, டீ, வெற்றிலைப் பாக்கு, கூல்டிரிங்ஸ் கிடையவே கிடையாது.

எனது எடை எண்பத்திரண்டு கிலோவிலிருந்து எழுபத்திரண்டு கிலோவுக்குக் குறைந்ததுக்குக் காரணம் பயிற்சி என்பதைவிட உணவு முறை என்பதே சரியாக இருக்கும். பயிற்சியால் மட்டுமே உடம்பு குறையாது என்பது என் அனுபவம்.

இன்னொரு விஷயம், நான் உணவில் அதிகமாகக் காரம் சேர்த்துக் கொள்வதில்லை. காரணம் கச்சேரியின்போது தொந்தரவு ஏதும் ஏற்படாவண்ணம் வயிறும், உடம்பும் இருக்க வேண்டும். மூன்று மணி நேரக் கச்சேரியில் இடையில் எழுந்து போவதெல்லாம் சரி வராது.

கனடாவில் ஏழு மணி நேர கச்சேரி நடந்தபோதெல்லாம் (கால்மணி மட்டும் இடைவெளி) தொடர்ந்து வாசிக்க முடிந்தது இதைப்போன்ற முறையான, சிரத்தையானக் கட்டுப்பாடுகளால்தான்.

தினசரி காலையில் 6.30 - 7.30 வரை மிருதங்க பிராக்டீஸ். என் குருநாதர் இராமநாதபுரம் எம்.என்.கந்தசாமிப் பிள்ளையிடமிருந்து எனக்குச் சொல்லப்பட்ட விஷயங்களில் முக்கியமானது டெய்லி பிராக்டீஸ். இன்றளவும் அதை நான் செய்து



வருகிறேன்.

என்னுடைய பதினொன்றாவது வயதில், மாண்டலின் சீனிவாசன் கச்சேரியில், மகாலிங்கபுரம் ஐயப்பன் கோயிலில் வாசித்ததுதான் என் முதல் கச்சேரி! அன்று தொடங்கி இன்றுவரை எனது இசைப் பயணம் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

என் தந்தையார் கலைமாமணி எல்.கிருஷ்ணன், 'பாராட்டுதலையும், தூற்றுதலையும் ஒன்றாகப் பாவிக்கிற மனோபாவம் கலைஞருக்கு அவசியம்' என்பார்.

அப்படிப்பட்ட மனநிலை கர்வத்தைத் தராது; கவனத்தைத் திருப்பாது; கலையை மேம்படுத்தும். அந்த மனநிலை இன்றுவரை

# போதாது!



தொடர்ந்து வருவது கடவுள் சித்தம். இசைக்கலை ஒரு பெரிய கடல். அதில் மாஸ்டராக ஒரு ஜென்மம் போதாது. இதை மனத்தில் கொண்டு, ஒரு நல்ல கலைஞனாக, மனிதநேயனாக வாழ முயன்று கொண்டேயிருக்கிறேன்.

சந்திப்பு : **அருணா. செந்தில்குமரன்**





# கல்கி



2006 டிசம்பர் 10
விய கார்த்திகை 24
மலர் : 65
இதழ் : 19

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## செத்த பாம்பை அடிக்கும் வீரம்!

**கொ**லை வழக்கில் குற்றவாளி என்று தீர்ப்பான பிறகு சிபு ஸோரனின் ராஜினாமாவைக் கேட்டுப் பெற்றுள்ளார் பிரதமர்! இதில் நம் நாட்டுக்குப் பெருமையைக் காட்டிலும் அவமானமே அதிகம். சிபு ஸோரன் ஊரறிந்த குற்றவாளியான போதிலும், அவரது கட்சியுடன் காங்கிரஸ் கூட்டணி வைத்துக் கொண்டிருக்கிறது!

மேலும், தற்போது ஸோரன் தண்டனை பெற்றுள்ள வழக்கு, அவர் பேரிலான முதல் வழக்கு அல்ல. 1980களில் ஜார்கண்டில் நடந்த போராட்டங்களின்போது நிகழ்ந்த ஒரு கொலை தொடர்பான வழக்கில், ஸோரன் பேரில் ஜாமீனில் வெளிவர இயலாத கைதாணையைப் பிறப்பித்திருக்கிறது நீதிமன்றம். அந்தக் கட்டத்தில் மத்திய அமைச்சராக இருந்த சிபு ஸோரன், அப்போதே ஒரு முறை ராஜினாமா செய்ய நேர்ந்தது. அந்த வழக்கே இன்னும் முற்றுப்பெறாத நிலையில், ஜாமீனில்தான் வெளியே இருந்தார் ஸோரன். ஜாமீனில் இருந்தவாறே மத்திய நிலக்கரித் துறை அமைச்சராகவும் ஆனார்!

தற்போதைய தண்டனை எதற்கு என்று பார்த்தால், அது வேறு ஒரு கொலை வழக்குக்கு! தமது தனிச் செயலர் சசிநாத் ஜாவைக் கடத்திக் கொலை செய்ததற்கு! ஜாவை ஏன் கொலை செய்தார் ஸோரன் என்று பார்த்தால், அது வேறு ஒரு குற்றத்தை மூடி மறைப்பதற்கு!

1993-ல் மைனாரிட்டி அரசாகிவிட்ட பி.வி.நரசிம்மராவ் ஆட்சியை ஆதரிக்க இலஞ்சம் பெற்றார் ஸோரன்! இது






குறித்த ரகசியங்களை அறிந்திருந்தார் ஜா. தாம் இலஞ்சம் வாங்கிய குற்றத்தை மூடி மறைத்து சட்டத்தின் பிடியிலிருந்து தப்புவதற்காக ஜாவைக் கடத்திக் கொலையும் செய்தார் ஸோரன்! ஆகக் கூடி, ஜனநாயகத்தைக் கொலை செய்யவும் ஸோரன் தயங்கவில்லை; மனித உயிரை மாய்க்கவும் அவர் யோசிக்கவில்லை.

இப்படிப்பட்ட தொழில்முறைக் குற்றவாளிகள் / குற்றம் சுமத்தப்பட்டவர்கள் தேர்தலில் நிற்கக் கூடாது என்கிற சட்டம் இருந்தும், குற்றம் நிரூபிக்கப்படாது, வழக்கு நிலுவையில் உள்ளபோது, சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து தப்பி, இவர்கள் தேர்தல் களத்தில் புகுந்துவிடுகிறார்கள்; பதவியும் பெறுகிறார்கள்.

கிட்டத்தட்ட எல்லாக் கட்சிகளிலுமே ஸோரனைப் போன்றவர்கள் இருக்கிறார்கள். ஆனால், இத்தகைய குற்றவாளி ஒரு கட்சியின் தலைவராக இருந்து, தமது மைனாரிட்டி பலத்தை வைத்துக் கொண்டு ஒரு கூட்டணியில் இணைந்து ஆட்சிப் பொறுப்பில் அமரவும் அனுமதிக்கப்படுவது என்பது ஜனநாயக விரோதமானது என்பது டன், வாக்காளர்களுக்கு இழைக்கப்படும் பெரிய அநீதி!

தேர்தல் வெற்றி-தோல்வி கோணங்களை ஒதுக்கி வைத்துவிட்டு, காங்கிரஸ் தலைமை தார்மிக அடிப்படையில் ஜார்கண்ட் முக்தி மோர்ச்சாவை நிராகரித்திருக்க வேண்டும். ஆனால், அதைச் செய்யும் துணிவு காங்கிரஸுக்கு இல்லை. ஸோரன் அமைச்சரானதுமே இந்த விவகாரம் பெரிதாக வெடித்து, எதிர்கட்சிகளின் கண்டனமும் ஆட்சேபனையும் எழுந்தன. அப்போதும்கூட அவர் அசைந்து கொடுக்கவில்லை; காங்கிரஸ் தலைமையும் அவருக்குக் கல்தா கொடுக்கவில்லை.

இப்போது, நீதிமன்றம் அவரைச் சிறையில் வைத்த பிறகு, அவரிடம் ராஜினாமா கோருவது என்பது செத்த பாம்பை அடிக்கும் 'வீரம்'ன்றி வேறென்ன!

இந்தக் கேவலமான நிகழ்வுக்குப் பிறகாவது விழிப்புணர்வு பெற்று, எல்லாக் கட்சித் தலைவர்களும் தார்மிக நெறிகளை வலியுறுத்தி, கறைபடிந்த யாரையும் கட்சியிலோ கூட்டணியிலோ சேர்ப்பதில்லை என்று தீர்மானிக்கட்டும். தங்களை நம்பி வோட்டளிக்கும் மக்களுக்கு அவர்கள் ஆற்ற வேண்டிய குறைந்தபட்ச கடமை இது! ○

# ரங்கா

அமரர் பி.வி.ஆர்.

"ரங்கா இப்ப எப்படி இருக்கே?"

"அமாவாசை முடிஞ்சு சந்திரன் வளர்ற மாதிரி சுகமா இருக்கேன், ரமணி சார். ஆனா இது எத்தனை நாளுக்கு? மறுபடியும் எப்ப மூச்சுத் திணருமோ, எப்ப டாக்டர் இதே ஆஸ்பத்திரியில் வந்து வைத்தியம் பார்ப்போரோ?



"சரியாப் போயிடும் ரங்கா."

"எப்படி?"

"இது நான் உசிரோட இருக்கிற வரை குணமாக முடியாத வியாதி. அப்பப்ப டாக்டர் கடிகாரத்துக்குச் சாவி கொடுத்திட்டிருக்கார். அப்பவெல்லாம் அது ஓடுது. ஒருநாள் அவர் சாவி கொடுத்துட்டே இருப்பார்... ஆனா ஸ்பிரிங் ஒடிஞ்சுடும்.

"எனக்கு வேண்டியதெல்லாம், ஒரு வீட்ல ஒரே ஒரு ரூம்தான். அதிலே பாயும் தலைகாணியும் இருந்தாப் போதும்!" ரங்கன் சிரிக்க முயன்றான். முடியவில்லை, தொடர்ந்தான்.

"நான் இப்பக் கடவுளை வேண்டிக்கறதெல்லாம் ஒண்ணே ஒண்ணுதான்."

"அது என்னன்னு எனக்குத் தெரியும், ரங்கா."

"அப்ப சொல்லுங்க."

"என்னிக்கும் உடம்பு திடமா இருக்கணும். ஆஸ்பத்திரியிலே இருக்கக் கூடாது. நான் எப்பவும் புத்தியிலே ரெண்டுங்கெட் டான். இப்ப உடல் நலத்திலேயும் ரெண்டுங் கெட்டான்."

"பேசாம வா, ரங்கா. உன்னை அமெரிக்காவுக்கு அனுப்பினா பூரணமாக் குணமாகுமான்னு யோசிச்சிட்டிருக்கேன்."

இப்போது ரங்கன் சிரித்தான்.

"அமெரிக்காவானாலும் போகிற உடம்பு இதேதான் ரமணி சார். பணம் எவ்வளவு இருக்கு?"

"கவலைப்படாதே... அஞ்சு லட்சத்துக்குக் குறைவு இல்லாம இருக்கு."

"அதை வெளிநாட்டிலே கொட்ட வேணாம் சார்."

தன் கடைசி நாட்களைத் தெரிந்து கொண்டார் ரங்கா என்பதைப் புரிந்து கொண்ட ரமணி பதில் பேசாமல் கனத்த மனதோடு சென்றார்.



# நடக்குமென்பார் நடக்கும்!

## 3.12.2006 முதல் 9.12.2006 வரை

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்** : சற்று சிரமமான வாரம். எதிலும் போராடி வெற்றி பெறுவீர்கள். உடல்நிலையில் கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். மேல் அதிகாரிகளின் தொந்தரவுகள் அதிகம் இருக்கும். புதிய முயற்சிகளை சற்றுத் தள்ளிப் போடவும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. பணக் கஷ்டம் இருக்கும். குரு / சனி / ராகு / கேது வழிபடுவதால் நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்**: மேன்மையான வாரம். எதிர்ப்புகள் விலகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீடு / வாகனம் வாங்க நல்ல காலம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு, பதவி உயர்வு கிட்டும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது வழிபடுவது நலம்.

**மிதுனம்** : போட்டியில் வெற்றி கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். கல்வி வளம் மேலோங்கும். மன சஞ்சலம் விலகும். புதிய கடன் கிடைக்கும். வீடு / மனை வாங்கும் யோகம் உண்டாகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம்** : திருமணக் காரியம் கைகூடும். வாக்குவாதம் தவிர்க்கவும். கணவன் - மனைவிக்குள் அனுசரணை தேவை. கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வண்டியில் செல்லும் போது உஷார். கைப்பொருள் மீது கவனம் தேவை. உடல் ஆரோக்கியத்தில் எச்சரிக்கை வேண்டும். கொடுக்கல் வாங்கலில் கவனம் அவசியம். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்** : மன சஞ்சலம் விலகும். வீடு மாற்றம் ஏற்படும். தடை விலகித் திருமணம் நடக்கும். பணக்கஷ்டம் இருக்காது. நண்பர் / உறவினர்களால் ஆதாயம்



ஏற்படும். செலவினங்கள் சுபமானதாக இருக்கும். கல்வியில் வளர்ச்சி ஏற்படும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்து அனுசரணையுடன் நடந்துகொள்வது நல்லது. ராகு / கேது / குரு / சனி வழிபாடு உத்தமம்.

**கன்னி** : எடுத்த காரியம் வெற்றி பெறும். எண்ணங்கள் யாவும் நிறைவேறும். திருமணக் காரியம் கைகூடும். மனதில் உற்சாகம் ஏற்படும். மனச்சலனம் தீரும். வேலையில் நற்பெயர் ஏற்படும்.

உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிட்டும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வழக்கு வெற்றி பெறும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**துலாம்** : வாக்கு வன்மை மேலோங்கும். தீர்க்க முடியாத காரியம் முடிவுக்கு வரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளிகள் மூலம் சங்கடங்கள் வரும். குழந்தைகள் இடம்மாறிச் செல்வார்கள். பொருளாதார கஷ்டம் இருக்கும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். வழக்கு வெற்றி பெறும். புதிய தொழில் நற்பலனை அளிக்கும். நாணயம் காப்பாற்றப்படும். ராகு / கேது வழிபாடு உத்தமம்.

**விருச்சிகம்** : மனதில் உற்சாகம் ஏற்படும். வேலையில் மாற்றம் உண்டாகும். சுபகாரியச் செலவுகள் ரெடி. கல்வியில் மேன்மை உண்டாகும். மனச்சலனம் விலகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். கொடுக்கல் வாங்கலில் நற்பலன் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ஆடை ஆபரணங்கள் வந்து சேரும். ராகு/ கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**தனுசு** : செலவுகள் நிறைந்த வாரம். புண்ணிய மகான்கள் தரிசனம் கிட்டும். திருமணம் கைகூடும். உடல்நிலை பாதிக்காது. நண்பர் / உறவினர்களால் செலவு ஏற்படும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். வெளிநாட்டுப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் ஏற்படும்.

**மகரம்** : திருமணக் காரியம் கைகூடும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து போவது நற்பலனைத் தரும். யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். கூட்டாளிகளால் மனக் கசப்பு ஏற்படும். வாகனத்தில் செல்லும்போது உஷார். வேலைப் பளு அதிகரிக்கும். வீடு / மனை வாங்க நல்ல நேரம். கூட இருக்கும் மனிதர்களால் சங்கடம் வரலாம். படிப்பில் கவனம் தேவை. ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்** : உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். இடமாற்றம் ரெடி. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். எதிர்ப்பு, தொல்லை விலகும். தூரதேச அழைப்பு வந்து சேரும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. பணக்கஷ்டம் விலகும். வராத பாக்கிப் பணம் வசூலாகும். ராகு/ கேது / குரு வழிபடுவது நலம்.

**மீனம்** : யோகமான வாரம். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. புதிய தொழில் முயற்சி வெற்றி பெறும். சுபகாரியச் செலவுகள் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் நற்பலனைத் தரும். ஆஞ்சநேயர் வழிபாடு நன்மை தரும்.

## பரத்வாஜ் பதில்கள்...

**● என் மகளுக்குத் திருமணமாகி நான்கு வருடங்களாகியும் குழந்தை இல்லை. குழந்தை பாக்கியம் எப்போது கிடைக்கும்? அவள் குடும்பத்தோடு வெளிநாட்டில் வசிக்க இயலுமா?**

**ஸ்ரீ ஹரி என்னும் ஜாதகருக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

**- முரளிபாய், செகந்திராபாத்**

உங்கள் மகளுடைய ஜாதகப்படி 2007-ல் குழந்தை பாக்கியம் ஏற்படும். குடும்பம் ஒன்றுபட்டு வாழும். வெளிநாட்டுக்குச் செல்லும் வாய்ப்பு வந்து சேரும்.

சிரஞ்சீவி ஸ்ரீஹரிக்கு சனி தசை நடக்கிறது. 2007-ல் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்குத் தெற்கு (அ) மேற்கு திசையில் பிறந்த பெண், வாழ்க்கைத் துணையாக வருவாள்.

**●என் பேத்திக்கு எப்போது திருமணம் நடக்கும்? தோஷம் ஏதேனும் உள்ளதா?**

**- லக்ஷ்மி ராமபக்தன், சென்னை-49**

உங்கள் பேத்திக்கு 2007-ல் திருமணம் நடக்கும். சென்னையில் பிறந்த பையன் வாழ்க்கைத் துணையாக அமைவான். 28வயதில் திருமணம் நடக்கும். தோஷம் இல்லை.

# SRI YOGAMAYA BHUVANESWARI PEETAM
# SRI BHARADWAJA ASHRAMAM



**KALLI KUPPAM,**
**REDHILLS ROAD**
**GANGAI NAGAR**
**AMBATTUR**
**CHENNAI - 600 053**
**TAMIL NADU**



மாணவ மாணவியர் கல்வியில் தேர்ச்சி அடையவும், நினைவாற்றல் பெருகிடவும் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்றிடவும் படிப்பில் ஆர்வம் கூடி முன்னேற்றமடையவும் மற்றும் பேச்சுத்திறன் அடையவும்

## ஸ்ரீ மஹா சரஸ்வதி யாகத்தினை

## பரமஹம்ஸ ஸ்ரீமத் பரத்வாஜ ஸ்வாமிகள்

**அம்பத்தூர் ஸ்ரீ யோகமாயா புவனேஸ்வரி பீடத்தில் சிறப்பாக நடத்த உள்ளார்கள்.**

நாள் : **31.12.2006** கிழமை : ஞாயிற்றுக்கிழமை

நேரம் : காலை **8.00** மணி முதல் **12.00** மணி வரை

இந்த யாகத்தில் பங்கு பெற விரும்பும் மாணவ மாணவியர் பெயர், கோத்திரம், நட்சத்திரம் ஆகியவற்றைத் தெளிவாக எழுதி ரூ.**2000/-** க்கு **" Sri Bhuvaneswari Manthram"** என்ற பெயரில் DD எடுத்து தங்களது தெளிவான விலாசத்துடன் மேற்கண்ட விலாசத் திற்கு அனுப்பி வைக்கவும்.

இத் தொகையை அனுப்பி இந்த மஹாயாகத்தில் கலந்து கொள்ளும் மாணவ மாணவியருக்கு யாகத்தில் வைத்து பூஜிக்கப் பெற்ற ஸ்ரீசரஸ்வதி ரக்ஷை, சரஸ்வதி ஸ்லோகம் மற்றும் ஹோம பஸ்பம் ஆகியவை ப்ரஸாதமாக வழங்கப் பெறும்.

நேரில் பங்கு பெற முடியாதவர்களும் மாணவ மாணவியரின் குறிப்புக்களுடன் ரூ **2000/-** DD எடுத்து அனுப்பி ஹோம ப்ரஸாதங்களைத் தபாலிலும் பெற்றுக் கொள்ளலாம்.

*" ஸ்ரீ புவனேஸ்வரி பரிபூர்ண க்ருபா"*

# கோயிலில் கல்வெட்டு...

தேவ குமாரத்திகளால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களைப் போலக் கருதப்படுகிற திரைப்பட கர்த்தாக்கள், தொடக்க காலத்தில் அருவருக்கத்தக்க தொழிலை நடத்துபவர்களாகவே கருதப்பட்டார்கள். சமூகப் போராட்டத்தைப் போல தமிழ்ச் சமூகத்தில் சினிமா தன்னை நிலைப்படுத்திக் கொள்ளச் செய்த போராட்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

தீண்டத்தகாத காரியமாக எண்ணி வெறுக்கப்பட்ட சினிமாவுக்கு இன்று வரவேற்புகள், பதக்கங்கள், மாலை மரியாதைகள். அரசியலிலும் இலக்கியத்திலும் பேர் பெற்றவர்கள்கூட சினிமாப் புகழுக்கு ஏங்கிச் செத்துப் போகவும் துணிகிற தலைமுறையை இன்று தரிசிக்கிறோம். ஆனால், 'நீ சினிமாவுக்கு நடிக்கப் போவாயேயானால் நான் கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்துகொள்வேன்' என்று இசை மேதை செம்மங்குடி சீனிவாச ஐயரை அவருடைய தந்தையார் எச்சரித்ததாக ராண்டார்கை வானொலி நேர்காணலில் தெரிவித்திருந்தார். சினிமா மோகம் அன்று பாவமாகக் கருதப்பட்டிருக்கிறது. மக்களைப் பள்ளத்தில் தள்ள வந்த பாதகமாக சினிமா பார்க்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பார்வையை மாற்ற, சாஸ்திரிய சங்கீத ஞானவான்கள் தம் அசாத்திய திறமையாலும், ஆளுமையாலும் எப்படியெல்லாம் பாடுபட்டிருக்கிறார்கள்!

நாடகப் பாணிப் பாடல்களும், இந்தி மெட்டுக்களும் தமிழ் வேடம் பூண்டு கொண்டிருந்த காலத்தில் தமிழ்த் திரையிசைக்குத் தனித்துவமான கவனிப்பைப் பெற்றுத் தந்தவர் பாபநாசம் சிவன்.

'தமிழ்த் தியாகய்யா' என்று போற்றப்படுகிற சிவன், 'சினிமா என்றால் அசிங்கம். அதில் வரும் பாடல்களைக் கேட்பது நாட்டுக்கே நல்லதில்லை' என்றிருந்த நிலையை மாற்றியவர்களுள் முக்கியமானவர்.

பண்டித பவுடர் பூசியிருந்த கர்நாடக இசையைப் பட்டிதொட்டி மக்களும் கேட்கும் வண்ணம் தமது ஆற்றலால் மக்கள்மயமாக்கியவர் சிவன்.

சினிமாவுக்குப் பாட்டெழுத வரும் முன்னமே சிவன் நிறைய கீர்த்தனைகளை, பக்திப் பனுவல்களை இயற்றியிருக்கிறார். 1965-ல் 'இசைப் பேரறிஞர்' என்ற பட்டத்தை 'தமிழிசை சங்கம்' மூலம் பெற்ற சிவனின் கீர்த்தனைகளை, அன்றைக்குப் பிரபலமாக இருந்த அத்தனைப் பாடகர்களும் தமது கச்சேரிகளில் பாடிக் கைத்தட்டல் பெற்றார்கள்.

இசையுலகில் நிலைபெற்றுவிட்ட பெயரான பாபநாசம் சிவன், பாபநாசத்தைச் சேர்ந்தவரல்லர்; அவருடைய பெயர் சிவனுமன்று. சிவனின் சொந்த ஊர், தஞ்சை மாவட்டத்தில் உள்ள போளகம் என்னும் சிற்றூர். இயற்பெயர் 'ராம சர்மன்'. வறுமையின் காரணமாக





சிறுவயதிலேயே திருவனந்தபுரத்துக்குப் போய் அங்குள்ள தர்ம சத்திரமொன்றில் தங்கிப் படித்து வந்திருக்கிறார். அப்போது அதே தெருவில் இருந்த அரமனை திருநீலகண்ட சிவன் என்பவர் பஜனைப் பாடல்களைப் பாடிய வண்ணம் செல்ல, அவர் பின்னால் ராமசர்மனும் தொடர்ந்திருக்கிறார். பிரபல இசை மேதையான திருநீலகண்ட சிவன் மீது பக்தி கொண்டு தனது பெயரை சிவனாக மாற்றிக் கொண்டிருக்கிறார்.

சன்னியாசியைப் போல, ஊர் ஊராகப் பக்தி ஸ்தலங்களை நோக்கிப் பாடிக் கொண்டிருந்த சிவன், குடும்பமானதும் பாபநாசத்தில் தங்க நேர்ந்தது. அது முதல் ராமசர்மன், பாபநாசம் சிவன் ஆனார்.

நாயன்மார்களைப் போலவும் ஆழ்வார்களைப் போலவும் திருத்தலம் தோறும் பாடிய பாபநாசம் சிவன், 1933-ல் வெளிவந்த 'சீதா கல்யாணம்' திரைப் படத்தின் மூலம் திரைத்துறைக்குள் நுழைந்தார். கோல்ஹாபூரிலிருந்த 'பிரபாத் ஃபிலிம் கம்பெனி' தயாரித்த அப்படத்துக்கான முதற்கட்ட பணிகளைக் கவனிப்பதில் உதவி புரிந்தது 'சவுண்ட் & ஷாடோ' என்ற ஆங்கிலப் பத்திரிகை. அப்பத்திரிகையோடு நெருங்கிய தொடர்புகொண்டிருந்த சிவனின் பாட்டும் இசையும் படத்துக்குப் பெருமை சேர்த்தன. பாடல்கள் பிரபலமாயின. இதற்கு அடுத்த படம்தான் 'பவளக் கொடி.' தென்னகத்தின் முதல் நட்சத்திர அந்தஸ்து பெற்ற நடிகராக விளங்கிய தியாகராஜ பாகவதரும் எஸ்.டி.சுப்புலெட்சுமியும் அறிமுகமான படம்.

கதாநாயகர்களில் முதலிடத்தைப் பெற எம்.கே.டி.-க்கு பேருதவி புரிந்தவை பாபநாசம் சிவனின் பாடல்கள். சிவனின் பாட்டெழுதும் முறையைப் பற்றிக் கூறுகையில், 'பாயில் அமர்ந்து கொண்டு கண்களை மூடியபடி பாடிப்

17

மாதரசே!
எனைக் கண நேரம்
பிரிய மனம்
வருமா?

பாடிப் பல்லவி அமைப்பார். தாம் எடுத்துக்கொண்ட ராகத்துக்கு முற்றிலும் பொருந்திய ஸ்வர அசைவுகளுடன் பல்லவி முடிந்ததும் அனுபல்லவிக்குப் போவார். இதற்குள் பல்லவி முழுமையாகப் பதிந்துவிடும். இம்முறையிலேயே சரணமும் அமைத்து அதனைத் தாளில் நகல் எடுப்பார். பிறகு, இயக்குநரையும் இசையமைப்பாளரையும் அருகில் வைத்துக் கொண்டு ஒழுங்கு படுத்துவார்' என்கிறார்கள் அந்தக் காலத் திரையுலகப் பிரமுகர்கள்.

இன்று பாடலாசிரியர், பாடகர், நடிகர் யாருக்குமே -- ஏன், இசையமைப்பாளருக்குக் கூட இசையறிவு தேவையில்லை என்ற பரிதாப நிலை. ஆனால், சிவன் காலத்தில் பாடத் தெரியாதவர் நடிகராகவே முடியாது. பாடத் தெரிந்த காரணத்தால் நடிக்கத் தெரியாதவரும் நடிப்புலகில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள்.

> ''என் மனைவி சிறுமியா இருக்கறப்ப, 'உன்னைத்தான் கட்டிக்குவேன்'னு விளையாட்டுக்குச் சொல்லுவேன்.''
> ''இப்ப விளையாட்டு வினையாயிட்டது பார்த்தியா?''
>
> - எம். அசோக்ராஜா

'ராதே உனக்குக் கோபம்
ஆகாதடி - மாதரசே
பிழை ஏது செய்தேன்?

எனைக் கணம் பிரிய
மனம் வந்ததோ - நீ
எங்கு சென்றாலும் நான்
உன்னை விடுவேனோ?
ஓடாதே' என்று 1937-ல் வெளிவந்த 'சிந்தாமணி' படப் பாடல், செஞ்சுருட்டி ராகத்தில் அமைந்த வர்ண மெட்டு. 'தமிழிசைக்கு என்னால் இயன்ற தொண்டு புரிந்து வந்திருக்கிறேன். எனக்குச் செய்யப்படும் கௌரவம் தமிழிசைக்கு, தமிழனுக்குச் செய்யப்படும் கௌரவம் என்றே கருதுகிறேன்' என்ற பாபநாசம் சிவன், பாடலாசிரியராக மட்டுமல்ல பின்னணிப் பாடகராகவும் இசையமைப்பாளராகவும் மிளிர்ந்திருக்கிறார்.

ஜெமினி பட நிறுவனம் மிகப் பிரமாண்டமாகத் தயாரித்த 'சந்திரலேகா'வில் 'மோஹனகாரா' என்ற பாடலின் வரிகளை மாற்றினால் தேவலாம் எனச் சிலர் கேட்க, சிவன் சம்மதித்திருக்கிறார். ஆனால், படத் தயாரிப்பாளரான வாசனோ, 'சிவனின் வார்த்தைகளை மாற்றுவதாவது? வேண்டுமானால் கேட்கிற உங்களை மாற்றுவேன் என்றாராம்!

1943-ல் 'சிவகவி' படத்தில் வெளிவந்த 'அம்பா மனங்கனிந்துனது' எனும் பாடலில்,

'பைந்தமிழ் மலர் பாமாலை
சூடி உன் பாதமலர்
பணிந்து பாடவும் வேண்டும்
சிந்தையும் என்நாவும்
எந்நேரமும்
நின் திருப்பெயர்புகழ்
மறவாமையும் வேண்டும்
பந்த உலகில் மதிமயங்கி
அறுபகைவர்
வசமாய் அழியாமல்
அருள்பெற வேண்டும்' என்று எழுதியிருப்பார்.

மாத்சர்யம், மதம், மோகம், லோபம், கோபம், காமம் ஆகிய ஆறையும் அறு பகைவர் என்று குறிப்பதாக வாமனன் தனது நூலில் குறிப்பிட்டிருக்கிறார். இப்பாடல், சென்னை புரசைவாக்கத்தில் உள்ள பொன்னியம்மன் ஆலயத்தில் கல்வெட்டாகப் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. திரைப்படப் பாடல், கோயிலில் கல்வெட்டாகும் ஸ்தானத்தைப் பெற முடியும் என்ற உயரத்தை சிவனே சாத்தியப்படுத்தியிருக்கிறார்.

அரசு தரும் உயர்ந்தபட்ச கௌரவம் அனைத்தும் சிவனுக்குக் கிடைத்திருக்கிறது. என்றாலும் ஆலயத்தில் மக்களின் அடிநெஞ்சில் கல்வெட்டான அவருடைய எழுத்துக்கு ஈடோ, இணையோ எதுவுமில்லை.

'பவளக்கொடிக்கு' சிவனைப் பாட்டெழுதி, இசையமைக்க வைத்த இயக்குநர் கே.சுப்ரமணியம், 1936-ல் சிவனையே கதா

நாயகனாக வைத்து 'பக்த குசேலா'வைத் தயாரித்தார். பாட்டையும், படப்பிடிப்பையும் தனித்தனியே பதிவு செய்யும் தொழில்நுட்பம் இல்லாத அக்காலத்தில் பாடல்களை கேமராவுக்கு முன்னே பாடி நடித்த சிவனின் முகபாவனைக்கும் பாராட்டுக் கிடைத்தது.

'குசேலர் வேடம் போடுவதற்காகவே இந்த பாபநாசம் சிவன் பிறந்தாரா அல்லது இந்த பாபநாசம் சிவன் தம்முடைய வேடம் போடுவதற்கு குலேசர் பிறந்தாரா' என்று எழுதிய கல்கி,

'சிவனுடைய சாரீரம் இனிமையானதன்று. ஆனால், அதில் உள்ள நடுக்கம் அதற்கொரு கம்பீரத்தை அளிக்கிறது. உருக்கமான கட்டங்கள் வரும்போது, அவருடைய அந்த நடுக்கம் பாடலின் உணர்ச்சியைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுகிறது' என்றும் பாராட்டியிருக்கிறார்.

தயாரிப்பாளர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க சிவன், இந்தியில் வெற்றி பெற்ற மெட்டுகளைத் தழுவிப் பாடல்கள் அமைக்க வேண்டி வந்தபோதும் தன்னுடைய தனித்துவத்தை, படைப்புத் திறனை ஒவ்வொரு பாடலிலும் நிலை நிறுத்திக் காட்டினார். 1933-ல் இருந்து ஏறக்குறைய பதினைந்து ஆண்டுகள் திரைத்துறையில் ஒளிர்ந்த சிவன், 800 பாடல்களுக்குமேல் எழுதியிருக்கிறார்.

1937-ல் வெளிவந்த 'சிந்தாமணி' திரைப்படம் வரலாறு காணாத வெற்றியடைந்தது. சிவனின் பாடல்களும் எம்.கே.டி.யின் நடிப்பும் அதற்குக் காரணமாகச் சொல்லப்படுகின்றன. அப் படத்தின் வெற்றியை முன்னிட்டு 'ராயல் டாக்கீஸ்' நிர்வாகம் தங்கள் திரையரங்கின் பெயரை 'சிந்தாமணி டாக்கீஸா'க மாற்றிக் கொள்ளும் அளவுக்கு மூன்றாண்டுகள் வரை அப் படம் அந்தத் திரையரங்கில் ஓடி வசூலைக் குவித்திருக்கிறது.

திரைத் துறையில் வியாபார வெற்றிக்குத் தரப்படுகிற முதன்மைத்துவம் தரத்துக்குத் தரப்படுவதில்லையோ என்கிற ஐயத்தைப் போக்கும் விதமாக சிவனின் பாடல்கள் அமைந்திருக்கின்றன. தான் அமைத்த திரைப்பாடல்களைப் பற்றி அவரிடம் கேட்டபோது...

'பாடல் வரிகளை முன்னால் எழுதி, நான் மெட்டுப் போட்டதில்லை. முதலில் மெட்டுப் போட்டு அதில் வார்த்தைகளை இட்டுத் திணித்ததில்லை. படத்தின் சூழலைப் புரிந்துகொண்டு, அதைப் பற்றி ஆழமாக நினைத்து, அப்போது உள்ளத்தில் எழும் உணர்ச்சிக்கு உருவம் கொடுப்பதைப் போல மெட்டையும் பாட்டையும் அமைப்பேன்' என்று சொல்லியிருக்கிறார் சிவன்.

'மன்மத ராசா' என்றொரு துள்ளலிசைப் பாடல் இன்றும் மக்களிடம் வரவேற்பைப் பெறக் காரணம் 'மன்மத லீலையை வென்றா ருண்டோ' என்ற பாபநாசம் சிவன் உருவாக்கித் தந்த வார்த்தையின் கவர்ச்சியேயாகும். 'சிவனின் பாடல்களும் இளங்கோவனின் வசனங்களும் இல்லையென்றால் படத்தில் நடிக்க மாட்டேன்' என்று நிபந்தனை போட்ட எம்.கே.டி. மட்டுமல்ல, பியுசி. மட்டுமல்ல, அத்தனை சாஸ்திரிய இசையாளர்களாலும் மதிக்கப்பெற்ற ஒரே பெயர் பாபநாசம் சிவன். திரைப்படப் புகழின் உயரத்தில் இருந்த போதும் சிரமதசையில் ஆரோக்கியக் குறைவால் வருந்திய எண்பத்திரண்டு வயதிலும் சிவன், மயிலை மாட வீதிகளில் சுற்றிப் பாடிவரும் அடியாராகவே இருந்தார் என்கிறார்கள் அவரையறிந்தவர்கள்.



சாதாரண வண்டியோட்டியும் சங்கீத ரசனையுடையவனாக மாறக் காரணமான சிவனின் பாடல்கள், தேவக்குமாரத்திகளால் ஆசீர்வதிக்கப்பட்டவை. காற்றை நம்மால் மூச்சாகப் பயன்படுத்தவே முடியும். சிவன் போன்றோரால்தான் அதனைக் கௌரவிக்க முடியும்.

(காற்று வீசும்)

# வாரம் ஒரு வேலை



**உ**ங்கள் வீட்டுக் குழந்தை டி.வி.யில் அதிகமாக எந்த நிகழ்ச்சிக்குக் கூடுதல் நேரத்தைச் செலவழித்துப் பார்க்கிறது? ஆம்; விளம்பரங்கள்... குழந்தைகளை டி.வி. முன்பு கட்டிப் போடுவதைப் போல் வேறு எந்த நிகழ்ச்சியும் அந்த அளவுக்கு அவர்களைக் கவர்வதில்லை.

இப்படி டி.வியில் ஒளிபரப்பாகும் விளம்பரங்களின் எண்ணிக்கையும் விளம்பரங்களுக்கென்று உருவாகியிருக்கும் ரசிகர் கூட்டமும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டேதான் போகின்றன.

விளம்பரங்கள் டி.வி, பத்திரிகை, வானொலி என்று பல்வேறு ஊடகங்கள் வழியே வர்த்தகப் பொருள்களை, மக்களிடையே கொண்டுபோய்ச் சேர்க்கும் பொறுப்பைச் சுமக்கின்றன. விளம்பரங்களின் தேவை கட்டாயமாகிவிட்ட இக்காலகட்டத்தில், விளம்பரத் துறையில் பணியாற்றுபவர்களின் எண்ணிக்கையும் கூடிக்கொண்டேதான் இருக்கிறது. சினிமா, டி.வி. போன்ற சக்தி வாய்ந்த ஊடகங்களில் நுழைவதற்கு அடித்தளம் அமைத்துக் கொடுப்பதால் இன்று ஒரு கூட்டமே விளம்பரத் துறையில் பணியாற்றத் தவம் கிடக்கிறது.

இந்த நிலைமை தமிழ்நாட்டில் மட்டும்தான். இந்தியாவின் பிற மாநிலங்களில் விளம்பரத் துறை இந்த அளவுக்கு ஓர் இண்டஸ்ட்ரியாக வளரவில்லை.

ஏனென்றால் தி.நகர் 'ரங்கநாதன் தெரு' என்கிற கான்செப்ட் இந்தியாவில் எங்கும் கிடையாது. கூடவே எந்த மொழியிலும் இவ்வளவு சேட்டிலைட் தொலைக் காட்சிகள் கிடையாது. தி.நகரில் ரீடெயில் பிஸினஸ் அதிகம். ஆகவே போட்டி மனப்பான்மையில் 'அடுத்தாத்து அம்புஜத்தைப் பார்த்தேளா' என்று ஒரு துணிக்கடை ஆடித் தள்ளுபடிக்கு விளம்பரம் செய்தால், கூடவே அதன் போட்டிக் கடைகளும் வரிசையாக விளம்பரங்களை அடுக்குகின்றன. விளைவு - இன்றைக்கு ஒரு வருடத்துக்கு ஆயிரம் டி.வி. விளம்பரங்கள் புதிதாகத் தயாரிக்கப்படுகின்றன.

முறுக்குக் கம்பிகளுக்கு விளம்பரம் தேவையா என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் இன்றைக்குப் பத்துக்கும் மேற்பட்ட முறுக்குக் கம்பிகள் விளம்பரங்களில் தம் உறுதியை நிலைநாட்டுகின்றன. கோபிச்செட்டிப் பாளையம் போன்ற சிற்றூரிலிருக்கும் கடை ஒன்று பெரிய அளவில் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்கிறது. அந்த அளவுக்கு தமிழகத்தில் விளம்பரம் என்பது ஓர் அசைக்க முடியாத சக்தியாக இருக்கிறது!

இப்படி ஓர் இண்டஸ்ட்ரி ஆல் போல் தழைத்து வளரும் பொழுது, இதில் உள்ள வேலைவாய்ப்புகளுக்கு அளவே இல்லை. விஷுவல் கம்யூனிகேஷன் (விஸ்காம்) படிக்கும் மாணவர்கள், விளம்பரத் துறையில் சாதிக்கும் கனவுகளோடு வாழ்க்கையைத் தயார்படுத்தி வருகிறார்கள். ஆனால் இந்த மாணவர்களுக்கு எந்த அளவுக்கு விளம்பரங்கள் மீது தெளிவான பார்வை இருக்கிறது? பதில் ஏமாற்றம்தான்! டெக்னிக்கலாக ஜாலம் காட்ட நினைக்கும் வருங்காலத் தூண்கள், விளம்பரத்தின் பொருளடக்கத்தில் கோட்டை விட்டு விடுகிறார்கள். யாருக்காக விளம்பரம் எடுக்கிறோம், அதில் என்ன செய்யப் போகிறோம், எப்படி ப்ராடக்டை விளம்பரத்தின் மூலமாகச் சந்தைப்படுத்தப்போகிறோம் என்பன போன்ற அடிப்படை விஷயங்களைக் கற்றுக் கொள்ளா





விட்டால் விளம்பர உலகம் உங்களுக்கானது இல்லை. நான் எம்.பி.ஏ. படித்தவன். ஆனால் நான் எடுக்கும் விளம்பரங்களின் இசை, இயக்கம், ஸ்கிரிப்ட் வொர்க் அனைத்தும் என் வசம்தான். ஆக, படிப்பைவிட ஆர்வமும் திறமையும் தான் இந்தத் துறையில் ஏணி அமைத்துக் கொடுக்கும்.

சென்னையில் மட்டும் நானூறு விளம்பர ஏஜென்சிகள் உள்ளன. ஒவ்வொரு விளம்பரமும் லட்சம் முதல் முப்பது லட்ச ரூபாய் வரை செலவிடப்பட்டு எடுக்கப்படுகின்றன. எனில் வருடத்துக்கு எத்தனை கோடி ரூபாய் இறைக்கப்படுகிறது என்று கணக்குப் போட்டுக் கொள்ளுங்கள். ஆனால் இத்தனை வேலைகளை

வேண்டும் என்கிற வித்தையை அஸிஸ்டெண்ட் இயக்குநராகப் பணியாற்றும்போதே கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு சினிமா இயக்குநரைக் காட்டிலும் இத்துறையில் அதிகமாகச் சம்பாதிக்க முடியும். ஆனால் அனைத்தும் நம்மிடமுள்ள சரக்கைப் பொருத்தே அமையும்.

என்னுடைய விளம்பரங்களில் அசத்தல், நற்செய்தி போன்ற அரதப் பழசான வார்த்தைகளைப் பயன்படுத்துவதில்லை. மாடத்தில் பூ பறிப்பது, விளக்கேற்றுவது, காலைப் பனியில் கோலம் போடுவதைப் போன்ற பார்த்துப் பார்த்துப் பழகின விஷுவல்களுக்கும் 'தடா'

# பணம் காய்க்கும் மரம்!

யும் செய்யத் தகுந்த ஆட்கள் இத்துறையில் உண்டா என்றால் கேள்விக்குறிதான்!

எண்ணெய் சொட்டுவது, கற்றைக் கூந்தலைச் சிறகடிப்பது, ப்ளேட்டில் உணவைப் பளபளப்பாகக் காட்டுவது போன்ற நுண்ணிய வேலைகளை விளம்பரங்களில் அழகாகக் காட்ட வேண்டும். ஆனால் இதைச் செயல்படுத்தும் திறமைசாலிகளை மும்பையிலிருந்து தான் பிடித்து வரவேண்டியிருக்கிறது. மிகத் தரமான விளம்பரங்களை எடுக்கத் தேவையான ஆட்களைத் தேட வேண்டியுள்ளது. ஒளிபரப்பாகும் விளம்பரங்களின் தரத்தை வைத்தே நல்ல இயக்குநர்களின் தேவைகளை அறிந்து கொள்ளலாம்.

விஸ்காம் படித்தவர்கள் இயக்குநராக மட்டுமல்ல, கேமரா, காஸ்ட்யூம், ஆர்ட் வொர்க் எனப் பல துறைகளில் நுழையலாம்.

முப்பது நொடியில் எப்படி ஒரு ப்ராடக்டைச் சந்தைப்படுத்த

தான். ஒரு விளம்பர இயக்குநருக்கு இருபத்து நான்கு மணி நேரமும் புதிய சிந்தனைதான் ஓட வேண்டும். தனித்துவத்தை எப்போதும் கடைபிடித்தல் அவசியம். எல்லோரும் குத்துப் பாட்டு ஸ்டைலில் விளம்பரங்கள் எடுத்தால், நீங்கள் அதற்கு எதிரான திசையில் சிந்திக்க வேண்டும்.

தனியொரு மனிதருக்கே விளம்பரங்கள் தேவைப்படுகிற காலம் இது. ஆக, இந்த மரத்தில் நல்ல விளைச்சல் உண்டு என்று நான் சொல்கிறேன்... 'சுறுசுறு' அணில்களாக மாற நீங்கள் ரெடியா?

சந்திப்பு :
**ச.ந.கண்ணன்**



அனுபவம்





# ஆபரேஷனிலிருந்து விடுதலை...

என் சகோதரியின் ஆறு வயது மகனுக்கு மூச்சுத் திணறலும், ஜுரமும் அடிக்கடி வந்தன. அவனை அவன் தந்தை முதன்முறையாக சபரிமலைக்கு அழைத்துச் சென்றார்.

போய்வந்த பத்தாவது நாளே ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்காக அவனை அழைத்துச் சென்றனர். தீவிர சிகிச்சைப் பிரிவில் சிறுவன் பரிசோதிக்கப்பட்டான். இறுதியில் அவனுக்கு நெஞ்சுக்குக் கீழே நீர் தேங்கி இருப்பதையறிந்து மருத்துவர்கள், அறுவை சிகிச்சை செய்ய வேண்டுமென்றனர்.

சிறுவன் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட செய்தியை, சபரிமலைக்கு சிறுவனை அழைத்துச் சென்ற குருசாமி அறிந்து, சிறுவனை அறுவை சிகிச்சைக்கு முன் பார்த்து, ஆசிர்வதித்தார். என்ன ஆச்சர்யம்! நாங்கள் பயந்த அளவுக்கு எதுவும் நடக்காமல், சிறுவன் குணமடைந்து வீடு திரும்பினான். ஐய்யப்பன் அருளாலேயே ஆபரேஷனிலிருந்து விடுதலை கிடைத்தது.

- வ.வைகுண்டம், சென்னை

நான் ஒரு வருடம் பிரம்மச்சர்ய விரதத்தை முன்னிட்டு ஷேவ் செய்யாமலிருந்தேன். மூன்று மாதங்களிலேயே நண்பர்கள் கிண்டல் காரணமாக ஷேவ் செய்துகொள்ள முடிவு செய்து மொட்டை மாடியில் கண்ணாடி, ரேசருடன் உட்கார்ந்தேன்.

திடீர் என்று ஒரு குரங்கு வந்து கண்ணாடியைத் தூக்கிக் கொண்டு புகைக் கூண்டின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டது.

> "ஸ்வாமி! நான் ஷேவ் பண்ணிக்க மாட்டேன். என் விரதம் தொடரும்" என்று வாய்விட்டுச் சொன்னேன்.

கண்ணாடியை திரும்பி வாங்குவதற்கான முயற்சி எல்லாமே தோல்வி. எனக்கு ஞானோதயமாகி "ஸ்வாமி! நான் ஷேவ் பண்ணிக்க மாட்டேன். என் விரதம் தொடரும்" என்று வாய்விட்டுச் சொன்னேன். என்ன ஆச்சரியம்! கண்ணாடியை என் கையிலேயே கொடுத்து விட்டது அந்தக் குரங்கு.

- எஸ்.முருகேசன், சித்தூர்

# 12 வயதுப் பெரியவர்

மத்யான நேரம். பள்ளிக்கூடத்தில் உணவு இடைவேளை.

தாமு, சாப்பாட்டை அவசரமாக முடித்துக்கொண்டு, 'இங்க்' தீர்ந்துபோன பேனாவை எடுத்துக்கொண்டு, பஜாருக்கு வந்திருந்தான்.

பெட்டிக்கடையில், நாலணா கொடுத்து இங்க் போட்டுக்கொண்டு, காலி சிகரெட் அட்டையொன்றின் மேல் எழுதிப் பார்த்துத் திருப்தியடைந்து, மூடி போட்டுக் கொண்டிருக்கும்போது,

"டேய்... தாமு..." என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டான்.

கடவுளே, அவர் பார்வையில் விழுந்து விட்டோமா? 'இங்க்' இருக்கிறதா என்று வீட்டிலேயே சரிபார்த்திருந்தால், பஜாருக்கு வரவேண்டியிருந்திருக்காது. யாரை, இனி பார்க்கவே கூடாது என்று நினைத்தானோ அவர் பார்வையில் விழும்படி நேர்ந்திருக்காது.

என்ன செய்வது... சங்கடத்தில் நெளிந்தான் தாமு.

முன்பெல்லாம் அந்தக் குரலையும், குரலுக்குச் சொந்தக்காரரையும் ரொம்பவே பிடிக்கும் அவனுக்கு.

வெங்கடேச சித்தப்பா.

அவன் அப்பாவோடு பிறந்தவர்.

எலக்ட்ரிசிட்டி போர்டில் வேலை.

டவுனுக்குள், பஸ் ஸ்டாண்ட் பக்கம்தான் வீடு.

அவன் ஐந்தாம் வகுப்புவரை கிராமத்துப் பள்ளிக்கூடத்தில் படித்துவிட்டு, மேற்கொண்டு படிக்க டவுனில்




இருந்த ஹைஸ்கூலில் சேர்ந்தபோது,

"தாமு, தினமும் கிராமத்திலிருந்து வந்து போக சிரமமா இருக்கும். டவுன்ல, நம்ம வீட்லயே தங்கிப் படிச்சுக்கட்டும்..." என்று சித்தப்பா சொன்னபோது, தாமுவுக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது.

டவுனுக்குள் வேடிக்கை பார்க்கக் கடைகள், பஸ்கள், சினிமா கொட்டகை, சித்திப் பையன்கள், அடிக்கடி அவர்கள் வீட்டில் செய்யும் அசைவம்... எல்லாவற்றுக்கும் மேலாக சித்தப்பா...

அவருக்குத்தான் அவன்மேல் எவ்வளவு பாசம்!

எங்கு பார்த்தாலும்...

"தாமு... நல்லா படிக்கிறியா.... நல்லாருக்கியா..." என்று தலையைக் கோதிவிட்டு, சட்டை பட்டன் போடாமல் விட்டிருந்தால் அதைச் சரியாகப் போட்டு விட்டு, ஏதாவது புத்தகம், நோட்டு தேவையாயிருந்தால் டவுனிலிருந்து வாங்கிவந்து கொடுத்து... விசேஷ நாட்களில் ட்ரவுஸர், சட்டை தைத்துக் கொடுத்து, ஒவ்வொரு முறையும் இரண்டு ரூபாய்க்குக் குறையாமல் காசு கொடுத்து...

அவ்வளவு பிரியமாக இருந்த சித்தப்பா வீட்டில் தங்கிப் படிக்க அவனுக்கு ரொம்ப விருப்பம்!

அப்பாதான்,

"அவன் ஒருத்தன் மட்டுமா டவுன் ஸ்கூலுக்குப் போகப் போறான். இங்கிருந்து ஏழெட்டுப் பசங்க படிக்கப்

போகுதுங்க. அவங்களோடு பேச்சும் சிரிப்புமா சேர்ந்து போய்ட்டு வர்றான். அவன் இல்லேன்னா இங்கே எங்களுக்கும் கையொடிஞ்சாப்ல இருக்கும்..." என்று தடுத்துவிட்டார்.

ஆனாலும் மத்தியான வேளையில் சாப்பாட்டுத் தூக்கை எடுத்துக்கொண்டு, சித்தப்பா வீட்டுக்குத்தான் ஓடுவான். வீட்டிலிருந்து கொடுத்தனுப்பிய சாப்பாடு ஈரம் ஊறி 'சன்'னென்று போயிருக்கும். சித்தி சூடாகக் குழம்போ, பொரியலோ தருவாள். மத்யானச் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வரும் சித்தப்பா பகோடா, மிக்ஸர் என்று ஏதாவது நொறுக்குத் தீனி வாங்கி வருவார். அவனுக்குத்தான் முதலில்! கிளம்பும்போது, மறக்காமல் சில்லறைக் காசு தருவார். மறந்தாலும் கேட்டு வாங்கிக் கொள்வான்.

ஸ்கூல் வாசலில் விற்கும் இனிப்புகளையும் பழங்களையும் வாங்கிச் சாப்பிட, அந்தக் காசு ரொம்பவே பயன்படும். சில நேரங்களில் சேர்த்து வைத்து பென்சில், நோட்டு என்று வாங்கிக் கொள்வான் தாமு.

தன் அப்பாவைவிட, சித்தப்பா மேல் அவன் ரொம்பப் பாசமாகத்தான் இருந்தான்.

ஆறாம் வகுப்பில் பாஸாகி தாமு, ஏழாம் வகுப்பில் நுழைந்து காலாண்டு தேர்வு எழுதி முடித்த நேரம்...

வயலுக்கு நீர் பாய்ச்சப்போன



அப்பா, மின்சாரம் தாக்கிக் கருகி விட்டார்.

எதிர்பாரா இடி, குடும்பத்தின் மேல் விழுந்தது.

அம்மா பித்துப் பிடித்தவள்போல் ஆனாள்.

செய்தி கேட்டு ஓடோடி வந்த சித்தப்பா, உயிரே போவதைப் போல் கதறி அழுதார்.

அவர் அழுகிறாரே என்றுதான் தாமுவும் அழுதான்.

அந்த அகால மரணத்துக்கு அனுதாபப்படாதவர் ஒருவரும் இல்லை.

'நல்ல மனுஷன். இன்னும் கொஞ்ச காலம் மண்மேல் இருந்திருக்கலாம். சின்னப் புள்ளய வச்சுக்கிட்டு சரோஜா எப்படித்தான் காலம் தள்ளப் போறாளோ...' என்று வருத்தப்பட்டனர். அப்பாவை இழந்தது சோகம் என்றாலும், பயமில்லை தாமுவுக்கு. அதான் சித்தப்பா இருக்காரே என்ற தைரியம்.

அப்பாவின் சிதைக்குக் கொள்ளி வைத்தான்.

எட்டாம் நாள் காரியம் வரை சித்தப்பாவின் பக்கத்திலிருந்து செய்து முடித்தான்.

"அம்மா... அப்பாவும் இல்லை. நாம ரெண்டு பேரும் டவுன்ல சித்தப்பா வீட்டுக்கே போய்ட்டா என்ன? அவர் என்னை நல்லா படிக்க வச்சு, வேலை வாங்கிக் கொடுப்பாரு. வேலைக்குப் போனதும், நாம தனியா வீடு கட்டிக் கலாம். அப்பா இல்லாத வீட்ல இருக்க எனக்குக் கஷ்டமா இருக்கும்மா..." என்று தாமு சொன்னபோது, அவன் அம்மா ஒன்றும் சொல்லாமல் கட்டிக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

**கா**ரியம் முடிந்த மறுநாள், வீட்டுத் திண்ணையில் ஊர்ப் பெரியவர்கள் பத்துப் பேர் உட்கார்ந்தார்கள்.

சித்தப்பா, கையில் பத்திர பேப்பர்களுடன் மையமாக உட்கார்ந்திருந்தார்.

தாமு நடப்பது என்னவென்று தெரியாமல், சித்தப்பா பக்கத்தில் போய் உட்கார்ந்துகொண்டான்.

அம்மா, வாய் திறவாமல் சுவரில் சாய்ந்திருந்தாள்.

பெரியவர்கள் வாதம் பண்ணினார்கள்.

அடிக்கடி அவன் பெயரும் அவன் அம்மா பெயரும் உச்சரிக்கப்பட்டன. கடைசியாக, பத்திரத்தை அவன் அம்மாவிடம் நீட்டிக் கையெழுத்து வாங்கினார்கள்.

சபை கலையும்போது,

"வெங்கடேசா... எது எப்படியோ... இந்தப் பையனைக் கை விட்றாம ஆளாக்கிடு..." என்று ஒரு தாத்தா, சித்தப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டபோது,

'இவர் என்ன எனக்குச் சிபாரிசு செய்யறது. என் சித்தப்பா எனக்குச் செய்யாம வேற யார்க்கு செய்வாராம்...' என்று கர்வமாக நினைத்துக் கொண்டான்.

ஒரு சிலர், அவன் அம்மாவை விசனத்துடன் பார்த்து,

"என்னைக்கு இந்தப் பொண்ணு கடனையெல்லாம் தீர்த்துக் கரையேறப் போகுதோ..." என்று பெருமூச்சு விட்டனர்.

"**ஏ**ம்மா... உன்கிட்ட கையெழுத்து வாங்கினாங்க..." ஆர்வத்தோடு அம்மாவிடம் விசாரித்தான் தாமு.



## அசோக்சிங்காலுக்காக...

**கே**.ஜி.ஹிந்து வித்யாலயா மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி, 'பஜன் அஞ்சலி' என்ற ஒலி நாடா ஒன்றை, விஸ்வ ஹிந்து பரிஷத் தலைவர் அசோக் சிங்காலின் எண்பதாவது பிறந்தநாளை முன்னிட்டு வெளியிட்டு உள்ளது. இதில் மொத்தம் பதினொரு பாடல்கள். அனைத்தும் நாராயணனைப் பற்றிய பாடல்கள். பாடல்கள் அனைத்தும் அப்பள்ளி மாணவர்களால் பாடப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.




அவன் எந்தப் பதிலும் சொல்லவில்லை.

"உனக்கெதுக்கு அதெல்லாம்? படிக்கற வேலையைப் பாரு..." என்று மட்டும் சொன்னாள்.

எதிர்வீட்டு மாமா சொல்லித்தான் அவனுக்கு விஷயம் தெரிந்தது.

இறந்துபோன அவன் அப்பாவுக்கு நிறையக் கடனாம். அதையெல்லாம் அடைக்காமல் இறந்து போனதால், எங்கே கடன்காரர்கள் தன்னை வந்து பிடிப்பாங்களோன்னு பயந்து சித்தப்பா ஒரு பத்திரம் எழுதி விட்டாராம்!

அதன்படி, தன் குடும்பத்துக்கும் அண்ணன் குடும்பத்துக்கும் யாதொரு பந்தமும் இல்லை. அவரவர் பட்ட கடன்களை அவரவரே தீர்த்துக்கொள்ள வேண்டும். பல வருடங்களுக்கு முன்னே பாகப்பிரிவினை முடிந்துவிட்டதால் அண்ணன் குடும்பத்துக் கடன்களுக்குத் தாம் எந்த வகையிலும் பொறுப்பில்லை என்று எழுதி, ஊரார் முன்னிலையில் கையெழுத்தும் ஆகிவிட்டது.

"இனி நீயும் உன் அம்மாவும் கடன்காரங்க. இருக்குற நிலத்துல பாடுபட்டு உன் அம்மா கடன அடைக்கட்டும். நீ உன் சித்தப்பன் காலைக் கெட்டியா பிடிச்சுக்கோ. அவனாலதான் உனக்கொரு நல்லது செய்ய முடியும்..." என்றார் அந்த மாமா.

தாமுவின் தன்மானம் காயப்பட்டது.

அவன் மனதின் கோபுரமாயிருந்த சித்தப்பாவின் பிம்பம் சடசடவென சரிந்தது.

அப்பா இறந்தபோது வராத கண்ணீர், அப்போது வந்தது.

"**எ**ன்னடா கூப்பிடறது காதுல விழலயா... இப்பெல்லாம் மத்யானத்துல வீட்டுப் பக்கம்கூட வரமாட்டேங்கறே..." கேட்டுக்கொண்டே, தாமுவின் அருகில் வந்தார் சித்தப்பா வெங்கடேசன்.

தாமு, மனமும் முகமும் இறுக நின்றான்.

"இங்க் போட வந்தியா... வீட்ல இங்க் பாட்டில் இல்லே... தீர்ந்து போச்சா... கடைக்காரரே, ஒரு பாட்டில் இங்க் கொடுங்க, பையனுக்கு..."

"வேணாம்; வீட்ல இருக்கு."

முகம் நிமிராமல் சொன்னான் தாமு.

"ம்... சாப்பிடலியா..."

"சாப்பிட்டேன்..."

"நல்லா படிக்கறியா..."

"ம்..."

"ஸ்கூல் விட்டதும் வீட்டுக்கு வர்றியா..."

"இல்ல. வேலை இருக்கு."

"உன் பேச்சே தினுசா இருக்கு. அப்பாவையே நினைச்சுக் கவலையோட இருக்காதே... என்ன" என்று முதுகில் தடவிக் கொடுத்து, சட்டை பாக்கெட்டில் வெங்கடேசன் ஐந்து ரூபாய் நோட்டொன்று திணிக்க, சட்டென்று எடுத்து அவரிடமே கொடுத்துவிட்டு,

"பணம் வேணாம். எனக்கு ஸ்கூலுக்கு டயமாச்சு..." என்று சொல்லிவிட்டு நடந்தான். அந்த நடையில் பெரியவர்களுக்கே உரித்தான மிடுக்கும், கம்பீரமும் தெரிந்தன. ○

# பரிசு ரூ.2000/-

படத்திலிருக்கும்
இயற்கைக் காட்சியையும்,
கருணையையும்
தொடர்புபடுத்தி
குறுங்கவிதையொன்றை
ஐந்து வரிக்குள் எழுதி,
அனுப்புங்கள். சிறந்த
எட்டுக் கவிதைகள்
தேர்ந்தெடுக்கப்பட்டுப்
பரிசுகள்
பகிர்ந்தளிக்கப்படும்.

# கற்பனையைக் கொட்டுங்கள்...

## போட்டி முடிவு!

கல்கி 5.11.2006 இதழின் ஜாலியா கண்டுபிடிங்க போட்டியின் சரியான விடை: அஜீத் - வரலாறு, சிலம்பரசன் - வல்லவன், ஆர்யா - வட்டாரம்

சரியான விடையுடன் கூடவே கல்கி பற்றிய 'நச்' கமெண்ட் எழுதி தலா ரூ.250/- பரிசு பெறும் எட்டு வாசகர்கள்:

* கல்வியும் தரும் கல்கி வீக்லி!
-இரா. கல்யாணசுந்தரம், அனுப்பானடி

* மீண்டும் மீண்டும் படிக்க வைக்கும்! அடுத்த இதழுக்கு ஏங்க வைக்கும்!
- ஆர். சுந்தரவல்லி, சென்னை - 11

* கல்கியைப் படி... உலக அறிவு கைக்குள் வருவதைப் பார்!
- எம். இலக்கியா, ஆத்தூர்

* பொம்மலாட்டம் ஆடாதது கல்கி! பொய் கருத்துகள் கூறாதது கல்கி!!
- ஆர். சேகர், நாகர்கோவில்

* கருத்துலகின் கலசம் கல்கி!
- ஜி.பாலசுப்பிரமணியன், விருதுநகர்

* மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் மாயக்கண்ணாடி!
- வ.உத்தரசாமி, சேலம்

* பண்பாட்டு மதிப்புகளைப் பாதுகாக்கும் பொக்கிஷம்!
- ஜி. நடராஜன், மதுரை - 16

* வார இதழ் 'வட்டாரத்தில் வரலாற்றுச் சாதனை படைத்துக் கொண்டிருக்கும் ஒரே 'வல்லவன்' கல்கி.
- பினுஷ் பிரபாகர், தஞ்சை-7

* பண்பாட்டு பதிப்புகளை பாது காக்கும் பொக்கிஷம் கல்கி.
- ஜி.நடராஜன், மதுரை - 16



என் கடவுள்... என் தோழன்





6

# இறப்பே கொண்டாட்டம்!

கடவுளை ஏற்பவர், கடவுளை மறுப்பவர் என்ற இரண்டு பிரிவினருள், கடவுளை ஏற்பவரை மட்டும் சற்றுப் பகுத்துப் பார்ப்போம். கடவுளை ஏற்பவர்களுள் கடவுளை ஆழ்ந்து, உணர்ந்து, உறுதியாக ஏற்றுக்கொள்வோரும் உண்டு; சிலர் தன்னை நோக்கித் துன்பம் ஏதேனும் வரும்போது, அதனை எதிர்கொள்ள இயலாது, தகுந்த உதவியைத் தேடிக்கொண்டிருப்பவரும் உண்டு. அப்படிப்பட்ட நிராதரவான நிலைமையினால் கடவுளை






ஏற்பவர், கடவுளை ஒரே வடிவில் பார்க்க மாட்டார். தன் மனோ நிலைகளுக்கு ஏற்ப கடவுளின் வடிவங்களை மாற்றிக் கொண்டே இருப்பார்.

இவர் தொடர்பான நமது நிராதரவின் காரணமாகவே கடவுளை ஏற்கிறோம். இதேபோன்ற நிராதரவான நிலைமையைத்தான்

தமிழ் வடிவம் : **சிவசங்கரி**

ஸ்தூல சரீரமான நமது உடலைப் பொருத்தும் உணர்கிறோம். வாழ்வின் நிராதரவான நிலைமையை உணர, புயல் தேவையில்லை. உடல் வளர வளர, மாற்றங்கள் ஏற்பட்டு, இறப்பு நிகழ்ந்து, அழிவு உண்டாகி, இறப்பின் தாக்கத்தை உணரத் துவங்கும்போது - நமக்கு பயம் ஏற்படுகிறது. மற்ற சாத்தியங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியாததால், கடவுளை நினைக்கிறோம்.

ஒருவேளை, இன்னொரு பரிமாணம் இருந்து, அதை நாமே கண்டுணரும் நிலை ஏற்பட்டால்.... அதாவது, இந்த ஸ்தூல சரீரம் அந்த மாபெரும் பிரபஞ்சத்தின் ஒரு பகுதிதான். எனவே 'நம்மை'த் தவிர வேறெதுவும் இல்லை என்பதை உணர்ந்து, நாம் யார் என்பதையும் புரிந்து கொள்ளும் பக்குவம் நம்மிடம் உண்டானால்... அப்போது 'இந்த உடல் அழியத்தான் செய்யும். ஆனால் அதைப் பற்றிய பயமேதும் நமக்குத் தேவை யில்லை' என்பது புரியும்.

**தா**ற்காலிகமாக இறப்பைச் சந்திக்க நேர்ந்தாலும், நாமேதான் அந்த நிலை யானதும் 'ஸ்திரமானதும்கூட என்பதை அறியும்போது, இறப்பே கொண்டாட்ட மாகி, கடவுள் மெய்யானவராகிவிடுவார். இப்படிப்பட்ட மனிதர்தான் தனது மனோதிடத்தின் மூலம் கடவுளை ஏற்கிறார். பலவீனம், நிராதரவின் காரணமாகவும் ஒருவர் கடவுளைப் பிரார்த்திக்கலாம். இவர், நிராதரவினால் வழிபடும் பக்தர். ஆனால் மற்றவர், ஞானத்தின் காரணமாகப் பிரார்த்தனை செய்யும் பக்தர். இவ்வாறு ஏற்றுக் கொள்ளும்போதுதான், கடவுளின் தன்மை மனிதனுக்குப் புரிகிறது.

'ஈஸ்வரன்' என்கிற பரிமாணத்தைக் கொண்டு நாம் துவங்க முடியாது. ஏனெனில் நான் முன்பே கூறியதைப் போல, அவரவரும் கடவுளைப் பற்றி தங் களுக்கு மிகச் சௌகர்யமான கருத் தாக்கங்களையே ஏற்கின்றனர். அப்படிப் பல கருத்துகள் இருக்கின்றன. கடவுள் சொர்க்கத்தில் இருப்பதாகச் சிலர் கூறுவர்; கடவுளுக்கு வடிவம் கிடையாது என்பார் இன்னொருவர்; கடவுளும் ஒரு மனிதனே என்பார் மற்றொருவர்; இல்லை, அவர் ஒரு பெண் என்பார் வேறொருவர்; இரண்டுமில்லை என்பார் பிறிதொருவர்; கடவுள் என்று யாருமே கிடையாது என்றுகூடச் சொல்வார் கள்.

இப்படிப் பலவகைக் கருத்துகள்! இவற்றில் எதை நம்புவது? கடவுளை நம்பு பவர்கள், கடவுளே இல்லை என்பவர்கள் - இரு வகையினரையும் பார்த்தால், கடவுள் இல்லையென்று சொல்பவரின் நம்பிக்கையைப் போன்றதுதான் கடவுளை ஏற்பவரது நம்பிக்கையின் அளவும்.

ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன்... என் அறையில், எனது பெட்டியினுள், கிருஷ்ணரின் தந்தச் சிலை ஒன்று இருக் கிறது என்று தெரிவித்து, நான் சொல்வது

## திருக் கைலாயம் செல்ல காசு கொடுக்கும் அரசு!

**தி**ருக்கயிலாயத் துக்குச் செல்ல இந்திய வழி, நேப்பாள் வழி இவற்றில் எந்த வழியில் சென்று வந்தாலும் தகுந்த ஆவணங்களைக் கொடுத்தால், கர்நாடக அரசு



யாத்திரை செல்பவர்களுக்கு ரூபாய் 25000/- கொடுக்கிறதாம்! கர்நாடக அரசின் இந்த அரிய முயற்சியைப் பக்தர்கள் அனைவரும் மனதாரப் பாராட்டுகிறார்கள்.



## வல்லி கண்ணனுக்கு மரியாதை!

சர்வதேச அகதிகள் நிறுவனமும் அடையாறு அன்பு பாலம் நிறுவனமும் இணைந்து தங்களின் செயல்பாடுகளை மக்களுக்கு விளக்கும் நோக்கில் வரும் பொங்கல் திருநாள் முதல் காலாண்டு பத்திரிகை ஒன்றினைத் தொடங்க உள்ளன. இதனையொட்டி வல்லிக்கண்ணன் சர்வதேச சிறுகதை மற்றும் நாவல் போட்டி நடத்தப்படுகின்றன. இதில் வெற்றி பெறும் சிறுகதை மற்றும் நாவலுக்கு முதலாவது, இரண்டாவது, மூன்றாவது மற்றும் ஆறுதல் பரிசுகளாக ரூபாய் ஒரு லட்சம் வழங்கப்படும்.

உண்மையா, பொய்யா என்று உங்களைக் கேட்டால் - உங்களால் எந்தப் பதிலும் கூற முடியாது.

'உண்மை' என்று கூற வேண்டுமானால், நீங்கள் அந்தச் சிலையைப் பார்த்திருக்க வேண்டும்; 'பொய்' என்று சொல்ல வேண்டுமானாலும், என் அறையில் இல்லாத அந்தச் சிலை எது என்பதை நீங்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டும். ஆக 'உண்மை', 'பொய்' என்று எதைச் சொல்லவும் நீங்கள் அதைப் பார்த்திருக்க வேண்டும். பார்க்காமலே 'உண்மை' என்றால், நீங்கள் வெறுமே நம்புபவர்... உங்களை 'ஆத்திகர்' என்பார்கள். பார்க்காமலே 'பொய்' என்றால், நீங்கள் நம்பிக்கையற்றவர்... உங்களை 'நாத்திகர்' என்பார்கள். இருவருமே நம்புபவர்கள்தான். கடவுளின் இருப்பைப் பற்றித் தெளிவாக அறியாமலே அவர் இருப்பதாக நம்புகிறார் ஒருவர்; கடவுள் இல்லையென்பதைத் தெளிவாக அறியாமலே அவர் இல்லையென்று நம்புகிறார் மற்றவர்.

இருவருக்குமிடையிலான ஒரே வித்தியாசம் - கடவுள் இல்லையென்று சொல்பவர், கடவுளின் தன்மையைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்குவதில்லை. ஏனெனில், கடவுளே இல்லை என்று அவர் துவக்கத்திலேயே முடிவுக்கு வந்துவிட்டார். ஒருவேளை, செவ்வாய் கிரகத்தில் எதுவுமே கிடையாது என்று விஞ்ஞானிகள் ஆராய்ச்சியே செய்யாமல் கூறிவிட்டால், அதன் சாத்தியக்கூற்றைக் கண்டுபிடிக்க விண்கலங்களை அனுப்பத் தேவையே இல்லை. ஆனால், 'பூமி ஒரு கிரகம்; அதில் காற்றுமண்டலமும் உயிர்களும் உண்டு. அதேபோல செவ்வாயும் ஒரு கிரகம்தான். அங்கும் காற்று மண்டலமும் உயிர்களும் இருக்கச் சாத்தியமுண்டு' என்று யாராவது சொன்னால், அது உண்மையா, பொய்யா என்பதைக் கண்டறிய விண்கலத்தை அனுப்பிப் பார்க்க முனைவார்கள். அவ்வாறு நம்பிக்கை உள்ளவருக்குத்தான், கண்டறிதலும் புலனாய்வும் சாத்தியமானவை. நம்புபவர் ஆய்ந்தறியத்தான் வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அது வெறும் நம்பிக்கையாகவே நின்றுவிடும். எனவே, கடவுளைப் பற்றிய விஷயங்களில், வெறும் நம்பிக்கை மட்டுமே போதாது. கடவுளிடம் நம்பிக்கை வைப்பது என்பது நல்ல ஆரம்பம்தான். ஆனால் அத்துடனே முடிந்துபோய்விடக் கூடாது. தொடர்ந்து அந்த மனிதர் உள்ளும், புறமும் கேள்விகளைக் கேட்டு, கடவுளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

(தொடரும்)

**அதிரடி இயக்குநர் பேரரசை ஓர் அந்திசாயும் நேரத்தில் சந்தித்தோம். தமது படத்தைப் போலவே காரசாரமாகப் பேசினார்...**

**'தர்மபுரி' எதிர்பார்த்த அளவுக்கு ஓடவில்லையே...உங்கள் ஃபார்முலா தவறிழைத்து விட்டதோ...?**

"சான்ஸே இல்லை. என்னுடையது வெற்றி ஃபார்முலா. 'திருப்பாச்சி', 'சிவ காசி', 'திருப்பதி' படங்கள் தமிழ்நாட்டிலேயே அதிக வசூலைப் பெற்றன. அதே மாதிரி தற்போது வந்த விஜயகாந்த் படங்களிலேயே மிக அதிக வசூலைப் பெற்றிருப்பதும் தர்மபுரிதான். அடுத்து விஜய்யுடன் கைகோக்கப் போகிறேன். முடிந்ததும் விக்ரமை வைத்து ஜெகஜ் ஜாலம் காட்டப் போகிறேன்."



**கமர்ஷியல் சினிமாவிலிருந்து உங்களால் வெளியே வரமுடியாதா? தமிழ் சினிமாவைப் பின்னோக்கிக் கொண்டு செல்வதில் அப்படியென்ன ஆர்வம்?**

"சினிமா என்றாலே கமர்ஷியல்தான். என்ன, கமர்ஷியலின் சதவிகிதம் என்னுடைய படங்களில் கொஞ்சம் அதிகமாக இருக்கும். எந்தப் புது இயக்குநரும் மசாலா படம் எடுக்க வேண்டும் என்று தீர்மானித்து வருவதில்லை. அந்தச் சூழ்நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். ஒவ்வொரு இயக்குநருக்கும் ஒரு இமேஜ் இருக்கும். என் இமேஜை உடனே மாற்றிக் கொள்ள முடியாது. அப்படி உடனே மாற்றினால் இடறிவிடுவேன். விரைவில் கமர்ஷியலின் சதவிகிதத்தைக் குறைத்து, கருத்தின் சதவிகிதத்தை அதிகப்படுத்தி விடுவேன். இன்னொரு விஷயம் கமர்ஷியலால்தான் தமிழ் சினிமா முன்னுக்கு வந்தது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்."

**'எந்த நடிகரும் அரசியலுக்கு வரக் கூடாது' என்று சமீபத்தில் காட்டமாகப் பேசினீர்களே... ஏன்?**

" சினிமாவுக்கோ, அரசியலுக்கோ யார் வேண்டுமானாலும் வரலாம். ஆனால் இரண்டிலும் உண்மை தான் ஜெயிக்கும். அன்று எம்.ஜி.ஆரைப் பாட்டு, வசனம், நடிப்பு மூலம் மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் அவருக்குப் பிறகு சினிமாவில் பாட்டு எழுதி, நடித்து, தமிழகத்தில் கட்சி ஆரம்பித்தவர்கள் பலர் இன்று காணாமல் போய் விட்டனர். மக்கள் தெளிவாகி விட்டார்கள். சினிமாவை மட்டுமே நம்பி அரசியலுக்கு வந்தால் ஏமாற்றம்தான். இதைத் தான் நான் சொன்னேன்."



**ஏன் பெரிய ஹீரோக்களையே சுற்றிச் சுற்றி வருகிறீர்கள்? புதுமுகங்களுக்கு வாய்ப்பு கொடுக்கலாமே...**

"ஆரம்பத்திலேயே பெரிய ஹீரோக்களை வைத்து இயக்கக் கிடைத்த வாய்ப்பு எனக்குப் பாக்கியம். கதாநாயகர்களுக்காகப் படம் பார்க்க வந்த ரசிகர்கள், பேரரசுக்காகவும் படம் பார்க்க வருகிறார்கள் என்பதைப் பார்க்குபோது சந்தோஷமாக இருக்கிறது. கூடிய விரைவில் வளரும் ஹீரோக்களை வைத்துப் படம் எடுப்பேன்."

**தமிழ்நாட்டில் இயக்குநர்கள் பெரும்பாலும் சதையை மதிக்கும் அளவுக்குக் கதையை மதிப்பதில்லையே?**

"இதை ஒப்புக்கொள்கிறேன். இந்த விஷயத்தில் கேரளாவை நாம் கோயில் கட்டிக் கும்பிட வேண்டும். இயக்குநர், ஒளிப்பதிவாளர், ஹீரோ, மியூசிக் டைரக்டர், பாடலாசிரியர்களுக்குக் கொடுக்கும் விளம்பர முக்கியத்துவத்தைக் கதை வசனம் எழுதுபவர்களுக்குக் கொடுக்காமல் கடைசியில் சிறியதாகப் பெயரைப் போடுவார்கள். நானும் ஆரம்பத்தில் கதை, வசனம் எழுதித்தான் இயக்குநரானேன். அதனால் அந்த வருத்தம் எனக்கும் தெரியும். உதவி இயக்குநர்களை மதிக்கிற அளவுக்குக்கூட வசனகர்த்தாவை மதிப்பதில்லை. ஷூட்டிங் ஸ்பாட்ல ஒரு டீகூட கொடுக்க மாட்டாங்க. அந்த அளவுக்கு இருட்டடிப்புச் செய்வாங்க. இதெல்லாம் மாறணும்."

**பாட்டு எழுதினீர்கள்... சரி, எந்தத் தைரியத்தில் தர்மபுரியில் பாடினீர்கள்?**

"இதற்குத் தைரியம் தேவையில்லை. குரல் நன்றாக இருந்தால் போதும். எப்பவுமே நான் பாட்டு எழுதின உடனே பாடிக் காட்டிடுவேன். அப்படித்தான் இந்தப் பாட்டை ஸ்ரீகாந்த் தேவாகிட்ட பாடிக் காட்டும்போது, அவர் நன்றாக இருப்பதாகக் கூறி, என்னையே பாடச் சொன்னார்.

**கவிதைகள் என்றால் உங்களுக்கு ரொம்பப் பிடிக்குமாமே?**

"ஆமாம். என் பாடல்களைக் கவிதைகளின் இன்னொரு வடிவமாகத்தான் நான் பார்க்கிறேன். சிறு வயது முதலே கவிதைகள்மீது எனக்கு ப்ரியம் அதிகம். நிறைய எழுதியிருக்கிறேன். அது தரும் சந்தோஷத்துக்கு ஈடு இணையாக வேறு எதையும் கூற இயலாது."

# வசனகர்த்தாக்களை மதிக்காத சினிமா...

**- விக்டர் மனோ**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

## - பேரரசு அட்வைஸ்

# கேளுங்கள்..




லண்டனிலுள்ள இம்பீரியல் கல்லூரியைச் சேர்ந்த மருத்துவர்கள் ஒரு நல்ல காரியத்தைச் செய்திருக்கிறார்கள். மொத்தம் நான்கு மனநல மருத்துவமனைகளிலிருந்து நூற்றுக்கும் அதிகமான நோயாளிகளைத் தேர்ந்தெடுத்து, அவர்களை இரண்டு குழுக்களாகப் பிரித்தார்கள். ஒரு குழுவுக்கு முறைப்படி மாத்திரை, ஊசி மருத்துவம். மற்றொரு குழுவுக்கு இசை



சிகிச்சை. அதாவது Music Therapy.

இரண்டாவது குழுவினரைத் தனியாக அழைத்துச் சென்று புல்லாங்குழல், பியானோ, வயலின் என்று விதவிதமான வாத்தியங்களை இசைத்துக் காட்டியிருக்கிறார்கள். யார் எதை அதிகம் விரும்பிக் கேட்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு அவர்கள் ரசனைக்கேற்ப மெலிதான இசை, ஜாஸ் இசை, டிரம்ஸ் என்று தவழ விட்டிருக்கிறார்கள்.

ஆச்சரியம்! மனச் சிதைவு நோயால் பாதிக்கப்பட்டுள்ள பலர் கையைக் காலை அசைத்து சுருதி லயம் மாறாமல் தாளம் போட்டு அனுபவிப்பதைக் கண்ட ஆராய்ச்சியாளர்களுக்குப் பரம மகிழ்ச்சி. அடுத்த கட்டமாக, குறிப்பிட்ட வாத்தியத்தை சம்பந்தப்பட்ட நபர்களிடமே அளிக்க, அவர்களும் குழந்தைகள் மழலை பேசுவதைப்போல இசையமைத்து மகிழ்ந்திருக்கிறார்கள்.

குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு, மாத்திரை - ஊசிக் குழுவையும், புல்லாங் குழல் - வயலின் குழுவையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது மனச் சிதைவு நோய் உள்ளவர்களுக்கு நிறைய இசை வழங்குவது நல்லது என்பது தெரிந்திருக்கிறது.

டீன் பருவத்தின் இறுதியில் அல்லது இருபதுகளின் தொடக்கத்தில் பெரும்பாலானோருக்கு மனச் சிதைவு நோய் வருகிறது. அறிகுறிகள்? அதீத கற்பனைகள் ('இந்தக் கதவுக்குப் பின்னாடி ஒரு ராட்சசப் பல்லி என்னை எப்ப வேணாலும் விழுங்கிடும்') மண்டைக்குள் யாரோ பேசுவது ('ஏய், நான் தான் பல்லி பேசறேன், ஏன் என்னோட பேச மாட்டேங்கறே?').

இசை இவர்களை முற்றிலும் குணப்படுத்தாது என்றாலும், பல ஆச்சரியமான மாற்றங்களை அவர்களுக்குள் ஏற்படுத்தும் என்கிறார்கள். மனச் சிதைவு நோய் என்றில்லை, 'அல்ஜீமர்ஸ்' என்னும் ஞாபகக் குறைச்சல் நோய்க்கும் இசையை மருந்தாகப் பயன்படுத்த ஆரம்பித்திருக்கிறார்கள். உதாரணத்துக்கு, ஒருவருடைய சிறு வயது நினைவுகள் மறந்துவிட்டன என்னும் பட்சத்தில், அந்த நபர் சிறு வயதில் கேட்ட இசையைத் தவழ விட்டால் பலன் கிடைக்கும் என்று சொல்கிறார்கள்.

'ராஜாவின் பார்வை ராணியின்



பக்கம்' பாடலைக் கேட்கச் செய்தால், அந்தப் பாட்டு கேட்டுக் கொண்டிருக்கும் போது காய்ச்சல் ஏற்பட்டு, ஒரு குண்டு டாக்டரிடம் குண்டு ஊசி போட்டுக் கொண்டது ஞாபகத்துக்கு வரலாம்.

ஒரு துண்டுச் சங்கிலி கிடைத்தால் போதும்; அதைப் பிடித்துக்கொண்டு முன்னேறிவிட முடியும். நினைவுகள் தனித்தனியாகத் தொலைந்து போவது அபூர்வம். டைரி பக்கங்களைப் போல், குறிப்பிட்ட காலத்தின் நினைவுகள் மொத்தமாகக் காணாமல் போகின்றன.

# மலருங்கள்...

கோடு போட்ட சட்டைப் போட்டுக் கொண்டிருந்தது நினைவுக்கு வந்துவிட்டால் போதும்; முழுச் சம்பவங்களையும் நினைவுக்குக் கொண்டு வந்துவிடலாம்.

மனச்சிதைவு என்பது எப்போது வேண்டுமானாலும் யாருக்கு வேண்டுமானாலும் ஏற்படலாம். ஆரோக்கியமான மனம் சிதைந்து போவதற்கு ஒரு விநாடிக்கும் குறைவான நேரமே போதுமானது. உடனே சுதாரித்துக் கொண்டால், நாமே நம் மனத்தைச் சரிசெய்து கொள்ள முடியும். அதற்கும் மருத்துவர்கள் இசையை ப்ரிஸ்க்ரைப் செய்கிறார்கள். பீத்தோவன், இளையராஜா, பிரிட்னி ஸ்பியர்ஸ்... எது வேண்டுமானாலும் இருக்கலாம். உங்கள் இறுக்கத்தைத் தவிர்க்க வேண்டும், அவ்வளவே.

மியூசிக் தெரபி கற்றுக் கொள்ள தனிப் படிப்பு உண்டு. அதை ஐந்து ஆண்டுகள் மெனக்கெட்டுப் படிக்க வேண்டும். உளவியல் சொல்லிக் கொடுக்கும்போதே மியூசிக் க்ளாஸும் எடுப்பார்கள். ஆறு மாதங்களுக்கு ப்ராக்டீஸ் செய்து முடித்து விட்டால், இசை சிகிச்சை செய்ய ஆரம்பிக்கலாம்.

'ஆட்டிசம்' உள்ள குழந்தைகளுக்கும் இசை சிகிச்சை ரொம்பவே பயனுள்ளதாக இருக்கிறது. குட்டீஸ்களுக்கு மிகவும் ரிஸ்க் எடுக்க வேண்டியதில்லை; கையைத் தட்டினாலே போதும். அதிலுள்ள லயம் அவர்களை உடனடியாகக் குதிக்க வைத்து விடும்.

**ஓர் அத்தியாவசியப் பின் குறிப்பு :** தற்போதைய தமிழ்த் திரைப்பட இசையை சிகிச்சைக்காகப் பயன்படுத்தும் முன் குறைந்தது 247 தடவை யோசிப்பது நலம்.





# நாத ப்ரம்மம்...

**"கடம்" கார்த்திக்:**

எம்.எஸ்.அம்மாவின் வரலாற்றை இந்நூலில் எழுதியுள்ளார் திரு. பி.சி. கணேசன். சுவையான சம்பவங்கள், சிறுசிறு குறிப்புகள், முக்கிய நிகழ்வுகள், வரலாற்றுச் சிறப்புகள், மனித பண்புகளின் வெளிப்பாடுகள், நெகிழ்ச்சியான உணர்வுகளின் சங்கமங்கள் - இவை யாவற்றையும் தெளிவான நடையில் தந்துள்ளார் நூலாசிரியர்.

**- இசை தேவதை எம்.எஸ்., ஆசிரியர் : பி.சி. கணேசன், கலைஞன் பதிப்பகம், விலை ரூ.20/-**

**விஜயலக்ஷ்மி சுப்ரமண்யம் (கர்நாடக இசைக் கலைஞர்):**

வி.எஸ்.வி. எழுதிய 'எம்.எஸ்.வாழ்வே சங்கீதம்' புத்தகத்தில் எம்.எஸ். என்கிற நாத ப்ரம்மத்தின் இசை வாழ்க்கை, பொது வாழ்க்கை, தனிப்பட்ட வாழ்க்கை ஆகிய மூன்றும் பதிவு செய்யப்பட்டுள்ளன. 1962-ல் போர் நிதிக்காக தம் வளையல்களைக் கழற்றிக் கொடுத்தது போன்ற நெகிழ வைக்கும் சம்பவங்களின் மூலம் அவர் 'சிறந்த மானிடர்' என்பது ஆழமாகப் பதிகிறது. வெள்ளிக் கிழமைகளில் கல்யாணி ராகம் பாடுவார்; கருகமணியும் கண்ணாடி வளையல்களும் விரும்பி அணிவார் என்பதைப் போன்ற வித்தியாசமான குறிப்புகள் ஆங்காங்கே உண்டு.

**- எம்.எஸ். வாழ்வே சங்கீதம், ஆசிரியர்: வியெஸ்வீ, கிழக்கு, விலை ரூ.60/-**

**ஆர்.வேதவல்லி (கர்நாடக இசைக் கலைஞர்):**

"எங்கும் நிறை நாதப்ரம்மம்" என்ற எம்.எஸ். அம்மாவைப் பற்றிய நூலை மிக அழகாக எழுதியுள்ளார் சங்கர் வெங்கட்ராமன். இவர் கூறியிருக்கும் எல்லா விஷயங்களுக்கும் ஆதாரமான தகவல்கள் தெளிவாகக் குறிப் பிடப்பட்டுள்ளன. எம்.எஸ். அம்மா அவர்கள் பிறந்ததிலிருந்து அவருடைய சங்கீத சூழ்நிலையைப் பற்றியும், அவர் குருநாதர்களைப் பற்றியும் விவரமா கவும் சுவையாகவும் கொடுக்கப்பட்டுள்ளது.

**- எங்கும் நிறை நாதப்ரம்மம், ஆசிரியர் : சங்கர் வெங்கட்ராமன், வெளியீடு : ஸரிகமபதநி ஃபவுண்டேஷன், விலை ரூ. 160/-**

**இம்மூன்று விமர்சகர்களும் எழுப்பும் ஒரே கேள்வி : "இம்மூன்று புத்தகங்களும் எம்.எஸ்.என்ற இசை பிரம்மாண்டத்தை முழுமையாக, உண்மையாக வெளிப்படுத்துகின்றவையா?"**

டிசம்பர் 11
எம்.எஸ்.
நினைவு நாள்




காங்கோவில் நடைபெற்று வரும் உள்நாட்டுக் கலவரங்களை அடக்க சமீபத்தில் ஐ.நா. தனது அமைதிப் படையை அனுப்பி இருக்கிறது. ஏற்கெனவே 1960-ல் பெல்ஜியம் காலனியாக இருந்த காங்கோ 1960-ல் விடுதலை பெற்றபோது, அங்கு நடைபெற்ற வெறியாட்டங்களைக் கட்டுக்குள் கொண்டுவர இந்தப் படை பயன்பட்டது.

இந்தியா, பாகிஸ்தான் எல்லைப் பகுதியில் கூட இந்தப் படை செயல்பட்டதுண்டு.

'பேச்சுவார்த்தைகளின் மூலம்' என்பது சாத்வீகமான வழி. ஆனால், சில சமயம் தடி எடுத்தால்தான் அமைதியைக் கொண்டு வர முடியும் என்று எண்ணியது ஐ.நா. அதன் காரணமாகவே ஐ.நா. அமைதிப்படை உருவானது.

1948-ல் இஸ்ரேலுக்கும், அரபு நாடுகளுக்கும் இடையே உண்டான அமைதி உடன்படிக்கை சரியான விதத்தில் பின்பற்றப்படுகிறதா என்பதை உறுதி செய்து கொள்ள அமைதிப்படை அங்கு போனது.

# ஐ.நா.வும் அமைதியும்





இருந்தாலும், இராணுவம் என்று வெளிப்படையாகவே அறிவிக்கப்பட்ட ஓர் அமைப்பு 1956-ல்தான் உருவானது.

இந்தப் படைக்கான இராணுவ வீரர்களை ஐ.நா. தேர்வு செய்வதில்லை. தொடக்கத்தில் பத்து நாடுகளைச் சேர்ந்த இராணுவ வீரர்கள் தேவைப்பட்டபோது ஐ.நா.வின் சார்பில் செயல்பட்டார்கள். இப்போது மேலும் அதிகமான நாடுகள் இதற்கு முன் வந்துள்ளன. என்றாலும் தாங்கள் அனுப்பும் இராணுவ வீரர்களைக் குறைத்துக் கொள்வதும், நிறுத்திக் கொள்வதும் அந்தந்த நாட்டின் உரிமைகள்!

இரண்டு நாடுகளுக்கு இடையே சண்டை ஏற்படும்போதும், உள்நாட்டுக் கலவரங்களின் போதும் ஐ.நா. அமைதிப் படை உதவும். இரு தரப்பினருமே இதற்கு ஒப்புக் கொண்டால்தான் அமைதிப்படை களத்தில் இறங்கும். ஆனால் அப்படி இறங்கிய பிறகு வழக்கமான பிற இராணுவத்தைப் போலவே அமைதிப்படையும் கலவரக்காரர்களை இரும்புக்கரம் கொண்டு அடக்கவே பார்க்கும். 1988-ஆம்

## ஜி.எஸ்.எஸ்.

ஆண்டில் நோபல் சமாதானப் பரிசு கூட கிடைத்திருக்கிறது.

அனைத்துத் தரப்பினரின் சம்மதம் கிடைக்காத போதும் கூட அமைதிப் படை தன் பங்கை நிறைவேற்றி உள்ளது.

கொரியப் போரிலும், வளைகுடாப் போரிலும் ஐ.நா. அமைதிப் படைக்குக் கௌரவமான ஓர் அங்கீகாரம் கிடைத்தது. ஆனால் போஸ்னியாவுக்கு ஐ.நா. அமைதிப்படை அனுப்பப்பட்டபோது, எதிர்பாராத விதமாக ஐ.நா. படையில் முன்னூறு வீரர்கள் போஸ்னியாவில் உள்ள செர்ப் பிரிவால் பயணக் கைதிகள் ஆக்கப்பட்டனர். ஐ.நா. அமைதிப்படை ஒட்டுமொத்தமாக விலகினால்தான் பணயக் கைதிகளை விடுவிப்போம் என்று நிபந்தனை விதித்தனர் செர்புகள். பிறகு விமானத் தாக்குதல் நடத்தப் போவதாக வட அட்லாண்டிக் நாடுகளின் அமைப்பு சீரியஸாகக் கூற, அதற்குப் பிறகே கைதிகள் விடுவிக்கப்பட்டனர்.

போஸ்னியா விவகாரத்தில் மட்டும் ஐ.நா. அமைதிப்படை எதனால் அவமானப்பட்டது? கொரியப் போரிலும் வளைகுடாப் போரிலும் ஐ.நா. நேரடியாகத் தனது படையை அனுப்பவில்லை. அதன் உறுப்பினர் நாடுகள் தங்கள் படையை அனுப்ப அது அனுமதித்து. ஆனால், போஸ்னியாவுக்கு வெவ்வேறு உறுப்பினர் நாடுகளிலிருந்து சேர்க்கப்பட்ட தனது படையையே அனுப்பியது.

ரஷ்யா, பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கு 'மற்றொரு நாட்டின் உள் கலவரங்களுக்காக நம் வீரர்களை எதற்காக ஐ.நா. அமைதிப் படைக்குத் தாரை வார்க்க வேண்டும்?' என்ற எண்ணம் வலுவடைந்ததும் ஒரு காரணம்.



இந்த எண்ணம் செயலாகாதவரை ஐ.நா. அமைதிப் படையால் வெற்றிகரமான விளைவுகளைத் தர முடியும்.

## சூப்பர் BRAND

இன்று கம்பர் ராமாயணம் எழுதுவதாக இருந்தால், நிச்சயமாக 'அண்ணலும் நோக்கினாள்; அவளும் நோக்கினாள்' என்பதற்குப் பதிலாக 'அண்ணலும் நோக்கியா; அவளும் நோக்கியா' என்றுதான் எழுதி இருப்பார். அந்த அளவுக்கு உலகப் புகழ் பெற்று விளங்குகிற பெயர் நோக்கியா. இது ஒரு ஜப்பானிய கம்பெனி இல்லை; பின்லாந்து கம்பெனி.

இதன் தலைமையகம், பின்லாந்து எஸ்பூ நகரில் இருக்கிறது. பிரேசில், சீனா, ஜெர்மனி, மெக்சிகோ, கொரியா, இங்கிலாந்து, லேட்டஸ்டாக இந்தியா என்று பதினாங்கு நாடுகளில் நோக்கியாவின் தொழிற்சாலைகள் இயங்கி வருகின்றன. மேலும் ஏதென்ஸ், ஹெல்சிங்கி, டோக்கியோ, பெய்ஜிங், புடாபெஸ்ட், கேம்பிரிட்ஜ், மசாசூசெட்ஸ் என்று பல இடங்களில் ஆராய்ச்சிக் கூடங்கள் செயல்பட்டு வருகின்றன. இன்று பின்லாந்து நாட்டின் பொருளாதாரமே, நோக்கியாவை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்றால் அது மிகையில்லை.

உலக மொபைல் போன் மார்க்கெட்டில், நோக்கியாவின் பங்கு முப்பத்தாறு சதவிகிதம். ஜி.எஸ்.எம். மற்றும் சி.டி.எம்.ஏ தொழில்நுட்பம் உட்பட பல்வேறு விதமான தொழில்நுட்ப அடிப்படையில் மொபைல் போன்கள் தவிர, தொலைதொடர்புத் துறைக்குத் தேவையான ஏராளமான உபகரணங்களையும் நோக்கியா உற்பத்தி செய்து உலக நாடுகள் பலவற்றுக்கும் விற்கிறது.

பின்லாந்து மட்டுமே தனது மார்க்கெட் அல்ல; உலகம் முழுவதும் நாம் கடை பரப்ப முடியும் என்று புரிந்து கொண்ட நோக்கியா, தன் சொந்த மண்ணுக்கு வெளியில் கால் வைக்கத் தனது தொழில்நுட்பங்களை மேம்படுத்திக் கொண்டு புதிய திட்டங்களை வகுக்கத் தொடங்கியது.

கேபிள் சாதனங்கள், ஒயர்கள், டயர்கள், இதர பொருட்கள் என்று நோக்கியாவின் பொருட்கள் ருஷ்யா உள்ளிட்ட பல்வேறு ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதியாயின. நோக்கியா ஆரம்ப காலம் முதலே சைக்கிள், கார் டயர், பர்சனல் கம்ப்யூட்டர், டெலிவிஷன் என்று பல்வேறு விதமான பொருட்களை உற்பத்தி செய்துள்ளது.

எழுபதுகளில் நோக்கியா, தொலைதொடர்புத் துறை சம்பந்தப்பட்ட கருவிகளைத் தயாரிப்பதில் அதிக கவனம் செலுத்தத் தொடங்கியது. நோக்கியா உருவாக்கிய நோக்கி டி.எக்ஸ் 200



என்ற கருவியின் உதவியால் ஒரு சாதாரண டெலிபோன் இணைப்பகம் முழுவதையும், டிஜிட்டல் இணைப்பகமாக மாற்ற முடிந்தது என்பது தகவல் தொடர்புத் துறையில் ஒரு புரட்சி.

1972-ஆம் ஆண்டு, பின்லாந்து ராணுவம் நோக்கியா மொபைல் போன்களை வாங்க மாபெரும் ஆர்டர் ஒன்றைக் கொடுத்தது. அடுத்தடுத்து, தொழில்நுட்பங்களை மேம்படுத்துவதன் மூலமாக புதிய மொபைல் போன் ரகங்கள் அறிமுகமாயின. எண்பதுகளில், கரி கைரமோ

எஸ்.சந்திரமௌளி





டர் பிரிவுகளை விற்றுவிட்டு, தொலை தொடர்புத் துறையில் அதிக கவனம் செலுத்த ஆரம்பித்தது நோக்கியா. 1991-ஆம் ஆண்டு, பின்லாந்து நாட்டின் தலைநகரான ஹெல்சிங்கி நகரத்தில், அந்த நாட்டுப் பிரதமர் ஹாரி ஹோல்கரி வர்த்தக ரீதியில் முதல் முறையாக நோக்கியா மொபைல் போனில் பேசினார். அந்த மொபைல் போன் சேவைக்கான நெட் ஒர்க்குக்கு வேண்டிய தொழில்நுட்பக் கருவி

# அன்னவும் நோக்கியா, அவளும் நோக்கியா!




என்பவரது நிர்வாகத்தின் கீழ் நோக்கியா பல புதிய கம்பெனிகளை வாங்கிப் போட்டது. எண்பதுகளிலும், தொண்ணூறுகளின் ஆரம்ப ஆண்டு களிலும் நோக்கியா நிதி நெருக்கடியினைச் சந்திக்க வேண்டியிருந்தது. காரணம், அதன் டெலிவிஷன் தயாரிப்புப் பிரிவு கடுமையான நஷ்டத்தில் இயங்கியதுதான். இதனால் கரி கைரமோ தற்கொலை செய்து கொண்டார்.

அடுத்து ஜோர்மா ஒலிலா தலைமை பொறுப்பேற்றுக்கொண்ட பிறகு, டெலிவிஷன் மற்றும் பர்சனல் கம்ப்யூட்

களைத் தயாரித்து சப்ளை செய்ததும் நோக்கியாதான்.

தொண்ணூறுகளில், உலக நாடுகள் பலவற்றிலும் மொபைல் போன் அறிமுகமாகி, மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பினைப் பெற்றது. இதனை முன் கூட்டியே எதிர்பார்த்த நோக்கியா, எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய மொபைல் போன் தேவையைச் சமாளிக்கத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டது. உலகின் பல்வேறு பகுதிகளிலும் நிறைய ஆராய்ச்சிக் கூடங்களை, தொழிற்சாலைகளை நிறுவி, புதுப் புது மொபைல் போன் மாடல்களை உருவாக்கியது.



2004-ல் மீண்டும் ஒரு சில பிரச்னைகளை நோக்கியா சந்திக்க நேரிட்டது. அப்போது எடுக்கப்பட்ட ஆட்குறைப்பு உள்ளிட்ட சில நடவடிக்கைகள் கடுமையான விமர்சனத்துக்குள்ளாயின. நீதிமன்றத்தில் சில வழக்குகளையும் சந்திக்கும்படி ஆனது. ஆனாலும், ஜோர்மா ஒலிலா, எல்லாப் பிரச்னைகளையும் சமாளித்தார். 2006-ல், ஒலிலா தலைமை பொறுப்பிலிருந்து விலகியதும், ஒலிலி பெக்கா கல்லாசுவா தலைமை நிர்வாகி ஆனார்.

**இரண்டாயிரம் பேருக்கு நேரிடையாகவும், சுமார் ஆறாயிரம் பேருக்கு மறைமுகமாகவும் நோக்கியாவால் வேலை கிடைக்கிறது!**

நிர்வாகச் சீர்திருத்த நடவடிக்கைகளுக்குப் பிறகு, நோக்கியா நிறுவனம் மொபைல் போன் உற்பத்தி, மல்டி மீடியா கருவிகள், உயர் தொலைதொடர்புத் தொழில்நுட்பம் ஆகியவற்றில் மட்டுமே கவனம் செலுத்தி வளர்ச்சி கண்டு வருகிறது. புதுப் புது டிசைன்கள், மாடல்கள், எளிமையாகப் பயன்படுத்துவதற்கேற்ற வடிவமைப்பு, வாடிக்கையாளர்கள் வாங்கக்கூடிய விலை ஆகியவையே நோக்கியா இன்று அகில உலக அளவில் ஒரு சூப்பர் ப்ராண்டாக விளங்குவதற்குக் காரணம். நோக்கியாவின் கேமரா போன் மற்றும் எம்.பி.3 பிளேயர் இணைந்த மொபைல் போன்களுக்கு வாடிக்கையாளர்கள் மத்தியில் பெரும் வரவேற்பு உள்ளது.

கடந்த சில வருடங்களில் இந்தியாவில் மொபைல் போன் வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை இலட்சக்கணக்கில் அதிகரித்துள்ளது. இதன் காரணமாக நோக்கியா ஹரியானா மாநிலம் குர்கானில் தலைமை அலுவலகத்தைக் கொண்டு தொழிற்சாலையைத் தமிழ் நாட்டில், ஸ்ரீபெரும்புதூரில் துவக்கியது. நோக்கியா இந்தியா நிறுவனம் இதற்காக 650 கோடி ரூபாய் முதலீடு செய்துள்ளது. ஸ்ரீபெரும்புதூரில் 210 ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட்டுள்ள நோக்கியா தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்ட மொபைல் போன்கள்தான் தற்போது இந்தியாவில் விற்பனையாகின்றன. இங்கே முழுவீச்சில் உற்பத்தி நடக்கும்போது, சுமார் இரண்டாயிரம் பேருக்கு நேரிடையாகவும், சுமார் ஆறாயிரம் பேருக்கு மறைமுகமாகவும் வேலை கிடைக்கிறதாம்!

அண்மையில் (ஜூன் 2006) ஜெர்மனியைச் சேர்ந்த சீமென்ஸ் நிறுவனத்துடன் இணைந்து 'நோக்கியா - சீமென்ஸ் நெட்ஒர்க்' என்ற நிறுவனம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இதன் மூலமாக இவர்களுடைய விற்பனையும், லாபமும் பலமடங்கு உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**நோக்கியா - சில தெரியாத தகவல்கள்:**

* 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஸ்பெயின் நாட்டு இசைக் கலைஞர் ஃப்ரான்சிஸ்கோ தாரேகா என்பவரின் 'கிரான் வால்ஸ்' என்ற கிடார் இசைதான் நோக்கியா மொபைல் போன்களில் ரிங் டோனாக ஒலித்து வருகிறது. அதுதான் இன்றைய நோக்கியா டோன் என்பது!
* நோக்கியாவின் புதிய மாடல்களை அறிமுகப்படுத்தும் நோக்கத்துடன் 1999 முதல் 2005 வரை ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் டி.வி.யில் பல்வேறு விளையாட்டு நிகழ்ச்சிகளை 'நோக்கியா கேம்ஸ்' என்ற பெயரில் நோக்கியா ஸ்பான்சர் செய்தது.
* உலகிலேயே மிக அதிகமாக விற்கப்படும் கேமரா போன்கள் நோக்கியாவின் தயாரிப்புகளே!
* நோக்கியா இந்தியாவின் இணைய தளம் : www.nokia.co.in





# மோகன்லாலின் வரலாறு!

நடிகர் மோகன்லால், கொச்சியில் ஐந்து நட்சத்திர ஓட்டல் ஒன்றைக் கட்டிக் கொண்டிருக்கிறார். பெயர், திருவாங்கூர் கோர்ட். ஸ்பெஷாலிட்டி என்ன தெரியுமா? ஓட்டலின் ஒவ்வொரு அறையிலும் கேரள மாநில வரலாற்றைச் சார்ந்த முக்கியக் காட்சிகள் வைக்கப்பட்டிருக்கும். இதற்காகவே ஒரு வரலாற்று ஆசிரியரும், ஓவியரும் இந்தப் பணியில் மும்முரமாக ஈடுபட்டுள்ளனர்.

இன்ஃபோசிஸ் ஃபௌண்டேஷன் தலைவரான சுதாமூர்த்தியின் எழுத்துகள் பல்வேறு இந்திய மொழிகளிலும் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. அவருடைய இரண்டு நாவல்கள் ஏற்கெனவே தொலைக்காட்சித் தொடர்களாக ஒளிபரப்பாயின. அவர் இப்போது ஒரு கன்னடத் தொலைக்காட்சித் தொடரில் நீதிபதி பாத்திரத்தில் நடிக்கிறார்.

பீகாரின் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் ராஜன் திவாரி. அண்மையில் முடிவெட்டிக் கொள்வதற்காக ஒரு சலூனுக்குப் போனார். அதை சில நியூஸ் சேனல்கள் படம்பிடித்து, ஒளிபரப்பி பெரும் பரபரப்பு ஏற்படுத்தி விட்டன. பலன்? ஓர் இன்ஸ்பெக்டர் உட்பட ஐந்து போலீஸ்காரர்கள் இடைக்கால பணி நீக்கம் செய்யப்பட்டு விட்டனர். ஏன்? ராஜன் திவாரி, ஒரு கொலை கேஸ் சம்பந்தமாகக் கைதாகி பாட்னா சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார். அவரை கோர்ட்டுக்கு அழைத்துச் சென்றுவிட்டுத் திரும்பும்போது, திவாரி, அவர் சலூனுக்குப் போகவேண்டும் என்று சொல்ல, போலீசும் கூடவே போயிருக்கிறது. இப்படித்தான் சில மாதங்களுக்கு முன்பு, ரெக்கார்டுகளின்படி சிறையில் இருக்க வேண்டிய ஒரு மாஜி, ஜாலியாக வீட்டில் இருந்தபோது போலீஸ் வந்து அவரை மீண்டும் கைது செய்தது.

- சி.எம்

# வெற்றி விழாங்கோ...



''நம்ம தலைவர் மக்களை நினைச்சு ரொம்பவே பயப் படறார்...''

''எதை வச்சு சொல்றே?''

''அடுத்த எலெக்ஷன்ல ஜெயிக்க வைப்பாங்களோ மாட் டாங்களோன்னு பயந்து இப்பவே கோடிக்கணக்குல சொத்து சேர்த் துட்டாரே...''

\- கே.ஆனந்தன்



''புது மாதிரி 'ஸ்வீட்' செய் திருக்கேன்றியே, இதோட பேரு என்ன?''

''தொண்டர்கள் குழந்தை களுக்கு வெக்கற மாதிரி, இதுக்கும் நீங்களே ஒரு 'பேர்' வெச்சிடுங்க!''

\- வெ.சீதாராமன்



''தேர்தல் வர்றதுக்குள்ள எதுக்கு வெற்றி விழா தலை வரே?''

''கருத்துக் கணிப்புல நமக்கு வெற்றின்னு வந் துருக்கே!''

\- அம்பைதேவா



''அரசியல்வாதிங்க மேடையிலே பேசும்போது 'புதிய இந்தியாவைப் படைப்போம்', 'புதிய இந்தியாவைப் படைப்போம்'னு சொல்றாங்களே பயமா இருக்கு...''

''ஏன்?''

''இப்ப இருக்கிற இந்தியாவை வித்துடப் போறாங்களேனுதான்''

\- ஆர்.ஆர்.பூபதி

## அருள்வாக்கு



# ப்ரியம்

சிந்தனை என்பதே, அதாவது மனசு என்பதே இல்லாமல் சும்மா யிருப்பதற்குத்தான் அத்வைதம் என்று பேர். த்வைதமாக, அதாவது இரண்டாவதாக ஒரு விஷயம் இருப்பதாக எப்படித் தெரிகிறது?

மனசு இருப்பதால்தான் தெரிகிறது. மனசு கொஞ்சம் அப்போது அடங்கிக் கிடப்பதால்தான் தன்னைத் தவிர இரண்டாவது ஆசாமி யாரும் தெரியவில்லை. அதனால் நிம்மதியாக, அமைதியாக இருக்கிறது.

இரண்டாவது ஆசாமி ஒருவர் தெரிந்து விட்டால் போதும், சாந்தி போச்சு! ஒன்று, அந்த ஆசாமியிடம் ப்ரியம் என்று மனசு அடித்துக் கொண்டு எதையாவது செய்யத் தோன்றுகிறது.

அதுவும் உண்மையில் அந்த ஆசாமியிடம் ப்ரியமில்லை; நம்மிடமேதான் ப்ரியம்; நமக்கு ப்ரியத்தை அந்த ஆஸாமி கொடுக்கக் கூடுமென்பதாலேயே அவனிடம் ப்ரியம்; ஆனால் அந்த ஆசாமியிடமும் ப்ரியம் என்பது எப்போதாவதுதான்.

நம்மைச் சேர்ந்தவர்கள் அல்லது இனிமேல் நமக்கு சுவாதீனமாகக் கூடியவர்கள் என்பவர்களிடம்தான் ப்ரியம். அப்படியில்லாத ஆசாமியிடம் வெறுப்பு, போட்டி இப்படித்தான் உண்டாகிறது.

ப்ரியத்திலே படுகிற சஞ்சலங்கள், செய்கிற காரியங்கள் ஆகியவற்றில் ஏதோ ஒரு சந்தோஷ நிழலாவது அடிக்கிறதென்றால், போட்டியிலும் வெறுப்பிலும் படுவதெல்லாமோ ஒரே கோபமும், துவேஷமும், அழுகையுமாகி, அவை இறுதியில் எதிராளியைத் தாக்குவதைவிட



நம்மையே அதிகம் தாக்குகின்றன. நம்மை நாமே வதைத்துக் கொள்கிறோம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

அமரர் கல்கி



# சாஹித்யமே ஜீவசக்தி...

தியாகராஜர், தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகள் ஆகியோர் 'மும்மூர்த்திகள்' என்று போற்றப்படுவதில் வியப்பில்லை அல்லவா?





நம் நாட்டு 'வாக்கேயக்காரர்'களில் மேற்கூறியவர்கள் மும்மூர்த்திகள். இவர்கள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று சொல்லத்தக்க மும்மூர்த்திகள் என்றால், இந்திரன், சந்திரன், சூரியன், வருணன், வாயு போன்ற தேவர்கள் பலரும் தொடர்ந்து வரத்தானே வேண்டும்? அம்மாதிரி தென்னாட்டின் பல 'வாக்கேயக்காரர்'கள் தோன்றிச் சங்கீத - சாஹித்ய வானில் சுடர் ஒளி வீசிக்கொண்டு வருகிறார்கள். சிலர் பத்துப் பதினைந்து கீர்த்தனங்களினாலும், இன்னும் சிலர் இரண்டொரு ஜீவ சக்தியுள்ள கீர்த்தனங்களினாலும் அமரத்துவம் பெற்று விளங்குகிறார்கள்.

சாஹித்யம் இயற்ற முன் வருவோரெல்லாரும் இவ்வாறு அமரத்துவம் பெறும் ஆசையுடன் அந்தப் பணியில் ஈடுபடுவதில்லை. சங்கீத தேவதைக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்னும் ஆர்வம் அவர்களுடைய இதயத்தில் பொங்கிப் பெருகிச் சாஹித்யங்களாகப் பரிணமிக்கின்றன.

அந்தச் சாஹித்யங்கள் ஜீவசக்தி உள்ளனவா, நீடித்து நிலைத்து நின்று அமரத்துவம் பெறக்கூடியனவா என்று கூறுதல் எளிய காரியமன்று.

ஆயினும் ஒரு வாக்கேயக்காரரிடம் இன்னின்ன அம்சங்களும், தகுதிகளும் இருந்தால், அவருடைய சாஹித்யங்கள் பிரபலமடைந்து ஜீவசக்தியுடன் விளங்கும் என்று சொல்லலாம்.

சாஹித்யம் செய்ய முன் வருகிறவருக்கு முதன்மையாகச் சங்கீதக் கலையில் ஆர்வம் இருக்க வேண்டும்; சங்கீத சாஸ்திரத்தின் நுட்பங்களை அவர் நன்கு கற்று அறிந்திருக்க வேண்டும்; அவருக்கே ஓரளவேனும் பாடத் தெரிந்திருக்க வேண்டும்; நல்ல சங்கீத ரசிகராகவும் இருக்க வேண்டும்; கல்வியறிவு பெற்ற 'சொல்லின் செல்வ'ராக இருகக வேண்டும்; இவ்வளவுக்கும் மேலாக, கற்பனா சக்தி உடையவராகவும் இருக்க வேண்டும்.

ஒரு சங்கீத வித்வானுக்குச் சங்கீதக் கலையில் எவ்வளவு மனோதர்ம வேகம் இருக்க வேண்டுமென்று சொல்கிறோமோ, அதைக் காட்டிலும் அதிகமாக சாஹித்ய கர்த்தாவிடம் இருக்க வேண்டும். அத்துடன் சொற்களுக்கு உயிரூட்டி உணர்ச்சி மயமாகச் செய்யக்கூடிய ஆற்றலும் இருக்க வேண்டும்.

**- வானதி பதிப்பகத்தின் 'படித்தேன்... ரசித்தேன்...' நூலிலிருந்து...**

போட்டிக் கதை

# அவள்

அட, அத்திம்பேரிடமிருந்தா ஈமெயில்! ஒவ்வொரு முறையும் நான் லீவில் சென்னைக்குப் போகும்போதும் என்னைச் சந்திப்பதை முற்றிலும் தவிர்த்த அத்திம்பேரா எனக்கு ஈமெயில் செய்திருக்கிறார்? முதலில் என்னால் நம்பவே முடியவில்லை. "ப்ளீஸ், உங்கக்காவுக்கு மட்டும் நான் கேட்டது இப்ப தெரிய வேண்டாம்" என்று துவங்கி அதே வரியுடன் முடித்திருந்தார்.

நானே எனக்குப் பிடித்தவனை மணம் செய்துகொண்ட போதும் சரி, பிறகு ஒத்து வரவில்லை என்றபோது மணவிலக்கு பெற்றபோதும் சரி, என் மீது கிளம்பிய கோபத்தையெல்லாம், அவரும் அவருடைய அம்மாவும் சொல்லம்புகளால் அக்காவைக் குத்தியதையெல்லாம் நினைக்காமல் இருக்க முடியவில்லை. அவர்களுக்கு என் மீது உள்ள அக்கறை என்றே மூன்றாம் நபருக்குத் தோன்றும். நிச்சயமாக அதுதான் இல்லை. அக்காவை அவ்வப்போது அழ வைக்க அவர்களுக்கு நல்ல ஒரு சாக்கானதுதான் உண்மை!

"உன் அக்காவுக்கு என்னிடமிருந்து பிரிவோ, மணவிலக்கோ வேண்டுமென்று அவள் நினைத்தால் அதற்கு நான் தயார். பெண்கள் பெரியவர்களாகி விட்டார்கள். இன்னும் ஒரே வருடத்தில் சின்னவள் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து விடுவாள். பெரியவள் வேலையில் அமர்ந்து விடுவாள். நான் கேட்டதாக இருக்க வேண்டாம். நீயாகவே கேட்பதைப் போலக் கேட்டு அவள் மனத்தில் இருப்பதைத் தெரிந்து எனக்குச் சொல்" என்ற ரீதியில் இருந்தது மின்மடல். மறந்தும், சடங்குக்காக சிங்கப்பூரில் இருக்கும் என்னைப் பற்றி விசாரித்திருக்கவில்லை.

ஏன், ஒரே கூரையின் கீழ் வசிக்கும் அக்காவிடமே அவர் இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கக் கூடாது? அவளிடம் கேட்க தைரியமில்லையா, இல்லை அக்கா நேராகக் கேட்கும் குறைந்தபட்ச நேர்மையையே விரும்புவாள் என்பதைக்கூட இந்த இருபத்திரண்டு வருடத் திருமண வாழ்க்கையில் அவர் புரிந்துகொள்ளத் தவறி விட்டாரா?

டிவோர்ஸ் செய்து தனியாக வாழும் நான்தான் இந்தத் தூது வேலைக்குச் சரியான ஆள் என்றும் நினைத்திருக்கலாம். ஆனால், பல சோதனைகளை, பல சவால்களைத் தாண்டி வந்த அக்காவுக்குத் தோன்றாத இந்த யோசனை இவருக்கு இப்போது ஏன்? அக்காவுக்கு அந்த யோசனை ஏற்பட்டிருக்கக்கூடும் என்று எந்த அடிப்படையில் யோசிக்கிறார்? ஆழம் பார்க்கிறாரோ? என்னையா, இல்லை அக்காவையா?

சடங்குகளை அதிகம் எதிர்பார்ப்பவர். அநேக நமஸ்காரங்களுடன் ஆரம்பித்து, 'மணவிலக்கு செய்பவர்களுக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் கொணரும் வலி மிகவும் அதிகம் என்று அனுபவத்தில் உணர்ந்துகொண்டவள் என்ற தகுதியில்' என்று தொடங்கி 'இதற்கு இப்போது என்ன அவசியம்' என்ற தொனியில் ஒரு பதில் போட்டுவிட்டு அவரிடமிருந்து பதிலுக்குக் காத்திருந்தேன். பதில் வர ஒரு வாரமானது.





சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

அன்றிரவு அக்காவிடம் போனில் பேசினேன். அவர் கேட்கச் சொன்னதைக் கவனமாகத் தவிர்த்து அக்காவிடம் பொதுவாக மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசினேன். எப்போதும் நகர்ந்துவிடும் அத்திம்பேர், இன்று அக்காவின் உரையாடலையும் முக பாவத்தையும் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பாரோ என்ற சந்தேகத்துடன், சிரமத்துடன் பேசி சீக்கிரமே விடை பெற்றுத் துண்டித்தேன்.

என்னுடையதைப் போலில்லாமல், அக்காவுடையது அப்பா - அம்மா பார்த்து நடத்தி வைத்த முறையான திருமணம். எல்லோரையும் தன்னைப் போலவே நேர்மையானவராக எண்ணி எளிதில் நம்பி விடும் அக்கா, புக்ககத்தில் படிந்து படர ஏகப்பட்ட சவால்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. சாதுவான அக்கா மௌனத்தையும் ரகசிய கண்ணீரையுமே இயலாமையின் வெளிப்பாடாகக் கொண்டாள். பிரித்தாள்வதில் சந்தோஷம் கொள்ளும் அக்காவின்

மாமியாருக்கோ, பெரிய சவால்களே இல்லாத வெற்றி கிட்டியது. திருமணம் தனக்கு எந்தவித பந்தத்தையும் கொண்டு வந்ததாக அத்திம்பேர் நினைக்கவில்லை. தன் அம்மா, அப்பா, அண்ணா மற்றும் அக்கா ஆகியோர் மட்டுமே அவருக்கு உறவுகள்!

அக்கா பெற்ற இரண்டு பெண்களையும் அக்காவின் நீட்சியாகப் பார்த்த அவருக்கு, ஆண் குழந்தை பிறக்காத குறை வேறு உண்டு. அதையும் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் சொல்லிக் காட்டிக் கொண்டிருந்தார். பொறுமை என்ற பெயரில் மரத்துக் கொண்டு வாழப் பழகினாள்.

பளிச்சென்ற தோற்றத்துடன் அக்காவுக்குப் பொருத்தமான உயரம் அவருக்கு. சமூகத்தில் நல்ல பெயருள்ள பல் மருத்துவர். ஆனால், அக்காவைப் பார்க்கும்போது முகத்தில் இருக்கும் சிரிப்பு மாயமாய் மறைந்துவிடும். அவரைப் புரிந்துகொள்ள அக்கா முயற்சி செய்து கொண்டிருக்கும்போது இரண்டு குழந்தைகளும் பிறந்து விட்டிருந்தன. தன் படிப்பையும், திறமைகளையும் முற்றிலும் மறந்துவிட்டு, அவர்களை வளர்க்கவென்று மேலும் சில வருடங்கள் மணமாகிப் பதின்மூன்று வருடங்களாகிவிட்டிருந்தன.

அவளது குடும்ப வாழ்வின் சோகத்துடன் என் மணவாழ்க்கை குறித்து அம்மாவும் அப்பாவும் கொண்ட கவலையும் அக்காவை மிகவும் பாதித்தது.

சொல்லி வைத்தாற்போல அடுத் நாளே அத்திம்பேரின் மின்மடல் வந்தது.

"என்னால 'தனிமை'யைச் சகிச்சுக் முடியல. அதான் காரணம்' என்று சுருக்கமாக எழுதியிருந்தார். ஓஹோ விஷயம் இதுதானா!

அக்கா வீட்டினுள்ளேயே வானப்பிரஸ் தம் மேற்கொண்டு வாழத் துவங்கி ஆறு வருடங்களுக்கு மேலாகிறது என் இரகசியத்தை என்னிடம் மட்டுமே பகிர்ந்துகொண்டிருக்கிறாள்.

அவர் தன் உடற் தேவைகளுக்கா நடந்துகொண்ட விதங்கள் அக்காவை மிகவும் அவமதித்துக் காயப்படுத்தி தாகப் புரிந்துகொண்டதுமே அவளுக்கு வானப்பிரஸ்த வாழ்க்கைதான்! "இனி மேல் இந்த மாதிரி என்னை அவமான படுத்த நான் விடமாட்டேன்", என்று தன் முடிவை அவரிடம் சொல் விட்டுத்தான் அதையும் செயல்படுத் ஆரம்பித்திருந்தாள். அவரும், "அப்ப நான் வெளியலயாடி போக?" என் போது ஏற்பட்ட கோபத்தைக் கட்டுப் படுத்திக்கொண்டு, பட்டும் படாம வாழ்ந்திருக்கிறாள்.

"உங்களுக்கு உடற் தேவைகளிரு க்கறாப் போல எனக்கும் உள்ளார்ந் நட்பு தேவையா இருக்கே! வீட்டு கிடைக்கல; அதுக்காக நான் வெ ளியலயா தேடிப் போக முடியும்?" என்று அக்கா நறுக்கென்று கேட்டிருக்க வேண் டும். அவள் கேட்கவில்லை. அவ இடத்தில் நான் இருந்திருந்தால் கே டிருப்பேன்.



"என் மனைவி என்னை ஒட்டடையடிக்கவே விட மாட்டாள்."

"அப்படியா! ஏன்?"

"அப்போ என் கை உயர்ந் திருக்குமே!"

- வீ. விஷ்ணுகுமார்

அக்காவின் முடிவினால் உள்ளூர பாதிக்கப்பட்ட அத்திம்பேர், அக்கா விரும்பும் நட்பை மறந்தும் கொடுத்து விடக் கூடாது என்ற நோக்கத்துடன் அவளோடு பேசாமல் இருந்து பார்த்தார்.

அப்போது சில உடலுபாதைகள் இருந்த போதிலும் வீட்டுப் பணிகளைச் சரிவரச் செய்த அக்காவை அலட்சியம் செய்துவிட்டு, நானூறு கிலோமீட்டர் தொலைவில் இருந்த அம்மாவை தொலைபேசியில் அழைத்து, "கால் வலி எப்படிம்மா இருக்கு? சாப்டியா?" என்றெல்லாம் வேண்டுமென்றே குலாவினார். அவள் சமைத்த விதவிதமான உணவு வகைகளைச் சாப்பிட்டுவிட்டு, அவள் காதுபடவே, ''உன் சமையல் யாருக்குக்கா வரும்?'' என்று தன் அக்காவுக்கு ஐஸ் வைத்தார்.

**ப**கல் நேரமாகப் பார்த்து அக்காவுக்குப் போன் செய்ய நினைத்தேன். உள்ளூரில் எல்லோரது பார்வை மற்றும் பேச்சிலிருந்து காப்பாற்றி, அவளைக் கூப்பிட்டு என்னுடன் சிங்கப்பூரில் இருக்கச் சொல்லிவிடலாம். ஒருவருக்கொருவர் துணையாயிற்று. ஏதாவது ஒரு வேலை வாங்கியும் கொடுத்து விடலாம். பேசாமல் வீட்டிலேயே இருந்தாலும் நான் பார்த்துக்கொள்வேனே அவளை. ஆனால், பாவம் எப்படிச் சகித்துக் கொள்வாள் என்று மட்டும் உள்ளூர பயமாகத்தான் இருந்தது.

வழக்கமான, ''எப்படியிருக்க?'', 'பொண்கள் எப்படியிருக்கா?'' என்ற விசாரிப்புகள் முடிந்ததுமே, ''எதிர் காலத்தப் பத்தி என்னக்கா நெனச்சிண்டிருக்கே?'' என்று கேட்டேன். ''என்ன திடீர்னு இந்தக் கேள்வி? இனிமே என்ன... ரெண்டுக்கும் நல்ல எடமா கல்யாணம் பண்ணனும்'' என்றாள்.

"அதெல்லாம் சரிக்கா, பசங்களோ பெரிசாயாச்சு. 'டிவோர்ஸ்' பத்தி நெனைச்சிண்டிருக்கியான்னுதான் கேக்கறேன்" என்றதுமே, "சீச்சீ, என்ன பேசற நீ? ம்... அவருக்கு நட்புன்னா என்னென்னே தெரியாது. கல்யாணமே 'அது' ஒண்ணுக்குத்தான்னு ஒரு நெனப்பு. சந்தேகமே இல்லாம டீசண்டான சுயநலவாதிதான் அவர். ஆனா, ஆயிரந்தான் இருந்தாலும் இந்த மாதிரியெல்லாம் 'டிவோர்ஸ்' பத்தி அவர் நெனைக்கக்கூட மாட்டார் வித்யா. பசங்க பெரிசானா என்ன? பிரிஞ்சுடணுமா? அதுக்கப்புறம் ஒண்ணுமேயில்லையா? எப்படி நீ இந்தக் கேள்விய... ம்... சரி விடு. வேற ஏதாவது பேசுவோமா?'' என்றாள்.

"ஓ... பேசுவோமே!" என்றேன்.

அத்திம்பேர் போட்டிருந்த வாய்ப்பூட்டை உடைத்து, அக்காவின் நம்பிக்கையையும் உடைக்க எனக்கு மனம் வரவில்லை. ○



"நீ உன்னோட மனைவிக்கு பயப்படறது இல்லைன்னு சொல்றது பொய் தானே?"

"அட... எப்படிக் கண்டுபிடிச்சே?"

"நானெல்லாம் அப்படித்தானே சொல்றேன்..."

- கே. ஆனந்தன்

# ஒரு தயாரிப்பாளரின் டைரிக் குறிப்பு!

### டிசம்பர் 19, திங்கள்

இன்னும் ரெண்டு வாரத்துல படப் பூசையை வைச்சிருக்கேன். நம்மூருக்காரப் பையன், 'குட்டியரசு', புதுசா கதை வைச்சிருக்கேன்னு சொன்னான். அவனை டைரக்டராப் போட்டு நானும் முதல் முறையா படத் தயாரிப்புல குதிக்குறேன். ஹீரோ, மியூசிக்கு டைரக்டரு, கேமரான்னு எல்லாருமே புதுசுதான். 'முடிச்ச விக்கான்பட்டி'னு படத்துக்குப் பேரு வைச்சிருக்கான் குட்டியரசு. ஹீரோயினு ஏதோ பம்பாய்க்காரப் புள்ளையாம். கதையை நிதமும் 'சொல்லுறேன் சொல்லுறேன்'னு மட்டும் சொல்லுறான். நாளைக்காவது கதையைக் கேட்டுப்புடணும்.

### ஜனவரி 27, வெள்ளி

நெனைச்சதைவிட நல்லாவே நடந்துச்சு பூசை. இன்னிக்கு சிட்டி ஃபுல்லா, நம்ம புது ஹீரோ புனித் அருவாளுலே செஞ்ச டிரெஸ்ஸைப் போட்டுக்கிட்டு நிக்குற மாதிரி ஒரு ஸ்டில்லு. கீழ 'முடிச்சவிக்கான்பட்டி - இவன் அருவாளுக்குப் பிறந்தவன்' டைட்டிலோட போஸ்டரு பளபளான்னு பல்லைச் காட்டுச்சு. அந்தப் பம்பாய்க்கார ஹீரோயினு 'அமீபா'வை இன்னிக்குத்தான் பாத்தேன். ஆத்தாடி, அது இருக்கு ஆஜானுபாகுவா ஆறடி. ஒன்றரைக் கண்ணு, சொப்பு வாயி இருந்தாலும் வெள்ளைத் தோலுங்கிறதால அந்தப் புள்ளை வந்து போற படமெல்லாம் இப்ப ஓடுதாமே! நாளைக்காவது படத்தோட கதையைக் கேட்டுப் புடணும்.

### மார்ச் 26, புதன்

ஷூட்டிங்கு பதினைஞ்சு நாளு நடந்திருக்கு. அதுக்குள்ள நம்ம குட்டியரசு, ஏதோ 'டிஸ்கஷன்'னு ஸ்டாரு ஹோட்டல்ல ரூமு போட்டு ஒக்காந்துக்கிட்டான். கதை கேக்கறதுக்காக நானும் போனேன். சொன்னான். 'லோக்கலா அருவா தயாரிக்குற நம்ம ஹீரோகிட்ட, அமெரிக்கா அருவா சப்ளை பண்ணச் சொல்ல. அவன் பெரிய ஆளாகி, சர்வதேசத் தீவிரவாதியை சம்ஹாரம் பண்ணுற கதை. முடிஞ்சா ஜார்ஜ் புஷ் கிட்ட ஒரு நாளாவது கால்ஷீட் வாங்கிரணும்'னு எக்ஸ்ட்ரா ஒரு பிட்டை வேறப் போட்டான். என்னிக்கு அமெரிக்கா போகணும்னு சொல்லப் போறானோ தெரியல.

### மே 20, சனி

ஊருல ஒரு இருவது ஏக்கரை நேத்துத்தான் வித்துட்டு வந்தேன். இன்னும் இருவத்தியஞ்சு லட்சம் வேணுமாம். ஷூட்டிங்குக்குப் போனேன். அங்க போனா, யாரையும் காணோம். 'ஹீரோ முதுகு புடிச்சிருக்குன்னு வீட்டுக்குட்



போயிட்டாரு. ஹீரோயின் பாய் ஃபிரண்டு புடிச்சிருக்குன்னு டேட்டிங் போயிட்டாங்க. இதெல்லாம் பிடிக்காத டைரக்டர் கோவிச்சுக்கிட்டு ஊத்திக்கப் போயிட்டாரு'ன்னு செக்யூரிட்டி சொன்னாரு. அடப்பாவிகளா, வாங்கின கடனுக்கு மீட்டர் வட்டி, கிலோ மீட்டர் வட்டியா ஓடுதே! நான் என்ன பண்ணப் போறேனோ?

## ஜூலை 4, செவ்வாய்

இன்னிக்குத்தான் ஷூட்டிங்கு மீண்டும் ஆரம்பமாயிருக்கு. 'இன்னும் மூணு ஃபைட்டு, ஒரு டூயட்டு, அனுஷ்வியாவோட கவர்ச்சிக் குத்து டான்ஸ் ஒண்ணு, ரெண்டு ஸீனு முடிஞ்சா ஒரு க்ளைமேக்ஸ். இல்லாட்டி, ஏற்கெனவே எடுத்த எதாவது ஒரு ஸீனை க்ளைமேக்ஸாப் போட்டுப் படத்தை முடிச்சிடலாம்'னு குட்டியரசு சொல்லுறான். அம்பாவோட கால்ஷீட் முடிஞ்சு போச்சாம். இன்னும் ஒருநாள் வேணும்னா சுளையா ஒரு லட்சம் தரணுமாம். தாத்தா மன்னிச்சுக்கோ. நீ எனக்காகக் கொடுத்த மச்சி வீட்டை நான் அம்பாவுக்காகத் தியாகம் பண்ணப் போறேன்.

## நவம்பர் 24, வெள்ளி

'முடிச்சவிக்கான்பட்டி' ஒரு வழியா ரிலீஸ் ஆயிருச்சு. முதநாள், முதஷோ! படம் பார்க்க ஒக்காந்தேன். தியேட்டருல என்னைத் தவிர 45 பேரு. பொங்கல், புளியோதரை, சிக்கன் பிரியாணி, அல்வா, தயிரு எல்லாத்தையும் ஒரே தட்டுல கலந்து கொட்டித் தின்னா எப்படியிருக்கும்? அப்படி ஒரு உவ்வே! அந்த 45 பேர் காலுலயும் விழுந்து கும்பிட்டு வந்தேன். எவனையோ நம்பி இப்படி ஒரு படம் கொடுத்ததுக்குக் பிராயச்சித்தமா, என்னை அமெரிக்காவோட பணயக் கைதியா அனுப்புங்க. சதாம் உசேனோட மரண தண்டனையை நான் ஏத்துக்கிறேன்.



**தொ**ழிலதிபர் கோத்தாரி என்கிற பொய் அடையாளத்தில் இருந்த ஆகாஷ், அந்த கெஸ்ட் ஹவுஸை அமைதியாகச் சுற்றிப் பார்த்தான்.

ஒரு வரவேற்பறை. அடுத்து ஒரு ஹால். இரண்டு படுக்கை அறைகள் - குளியலறை இணைப்புடன். ஒரு சமையலறை. பின்புறம் செல்ல தனிக் கதவு. அதைத் திறந்து பின்புறம் வந்தால் அழகான, சிறிய நீச்சல் குளம். அதையொட்டி பேட்மின்டன் கோர்ட். சின்ன தோட்டம். தோட்டத்தில் பெரும்பாலும் தொட்டிச் செடிகள். நடுவில் பிளாஸ்டிக் மேஜை, நாற்காலிகள். இரண்டு மரங்களுக்கு நடுவில் கட்டப்பட்ட ஜீலா.

ஆகாஷ் அந்த ஜீலாவில் நீளமாகப் படுத்துக்கொண்டு நட்சத்திரங்கள் நெருக்கியடித்துக் கொண்டிருந்த வானத்தைப் பார்த்தான்.

'பூஜா, உன் காதலன் குமரனிடம் உன் மூலம் பணம் கறக்க நினைத்தேன். இப்போது அவனுக்கு மனைவியாகப் போகிறவள் மூலம் கறக்கப் போகிறேன்.

முகவரியை மாற்றிவிட்டால் உன்னைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாதா, என்ன? உன் அப்பா வீட்டுக்குப் போகவில்லை. எனவே சென்னையில் வேறு அலுவலகத்தில் வேலையை மாற்றி, வீட்டை மாற்றி, செல்போன் எண்ணை மாற்றிப் பதுங்கியிருக்கிறாய்.

20

பட்டுக்கோட்டை பிரபாகர்

வருகிறேன்; இந்தக் கடத்தல் நாடகம் நடந்து முடிந்ததும் உன்னிடம் வருகிறேன். அவ்வளவு கலபத்தில் உன்னை விட்டு விடுவேனா?'

அமர்நாத் வேடத்தில் இருந்த கஜா, காய்ந்த இலைச் சருகுகளை மிதித்து ஓசை செய்தபடி அவனிடம் வந்தான்.

"என்ன?"

"வாட்ச்மேனை என்ன சொல்லிக் கழட்டி விடறதுன்னு புரியலை, சார். ஏதாச்சும் வாங்கிட்டு வரச் சொல்லலாம். வாங்கிட்டு உடனே வந்துடுவானே..."

"அவனை இங்க கூப்பிடு."

சில நிமிடங்களில் மாணிக்கம் வந்து நின்றான்.

"உன் பேரென்ன சொன்னே?"

"மாணிக்கம் சார்."

"மாணிக்கம்... சுத்தி வளைச்சுப் பேச விரும்பலை. ஓய்வெடுக்கவும், உல்லாசத்துக்காகவும்தான் நாங்க வந்திருக்கோம்."

"தாராளமா இருங்க சார். விஸ்கி, பிராந்தி வாங்கிட்டு வரணுமின்னா சொல்லுங்க. சைக்கிள் இருக்கு; போய்ட்டு வந்துடறேன்."

"அதெல்லாம் இருக்கு, மாணிக்கம்."

"வேற...? பொண்ணா?"

"கப்புன்னு பாய்ண்ட்டைப் பிடிக்கிறியே..."

"சார்.. எனக்கு அதெல்லாம் தெரியாது சார். கூட்டிட்டு வந்தா எதுவும் கண்டுக்க மாட்டேன். ஏற்பாடு பண்றதெல்லாம் முடியாது."

"ஏற்பாடெல்லாம் ஆச்சு, மாணிக்கம். பாண்டிச்சேரிலேர்ந்து இப்ப வந்துடும்."

"உங்க இஷ்டம் சார். ஆனா அடிக்கடி ரெய்டு வருது."

"எனக்குத் தெரியாத போலீசா? எத்தனை மினிஸ்டர்ஸை எனக்குத் தெரியும் தெரியுமா? அதெல்லாம் நான் பாத்துக்கறேன்."

"அப்படின்னா எனக்கென்ன சார்?"

"உன் உதவி எதுவும் தேவையில்லை, மாணிக்கம். நீ போய்ட்டு நாளைக்கு வந்தாப் போதும்."

"மொதலாளி சத்தம் போடுவார், சார். கெஸ்ட் வந்திருக்குறப்ப நான் இங்கேயே

இருக்கணும்."

"சொன்னாப் புரிஞ்சுக்கய்யா, எங்களுக்குப் பிரச்னை இல்லை. வர்ற பார்ட்டி ஒரு ஃபேமிலி பார்ட்டி. இங்க எங்க ரெண்டு பேரைத் தவிர வேற யாரும் இருக்கக் கூடாதுன்னு கண்டிஷன் போடுது. கோவிச்சுக்கிட்டுத் திரும்பிப் போயிடுச்சன்னா? அதுக்குத்தான் சொல்றேன். ஆயிரம் ரூபா தர்றேன், வாங்கிட்டு கௌம்பு."

அந்த இருட்டிலும் ஆயிரம் ரூபாய் என்கிற வார்த்தைகள் மாணிக்கத்தின் முகத்தைப் பிரகாசமாக்கியதை ஆகாஷ் கவனித்தான்.

கஜா ஆயிரம் ரூபாய் தர, வாங்கிக் கண்ணில் ஒற்றிக்கொண்ட மாணிக்கம், "என்னோட செல்போன் நம்பரை எழுதிக்குங்க." என்றான்.

"அப்படியே உன் நாயையும் கூட்டிட்டுப் போய்டு."

தலையாட்டின மாணிக்கம், நாயை அவிழ்த்து சைக்கிள் கேரியரில் உட்கார வைத்துக் கொண்டு புறப்பட்டுப் போனதும் இரண்டு பேரும் சிரித்துக் கொண்டார்கள்.

"கஜா, உன் ஆளுக்கு போன் போடு. அங்க என்ன நிலைமைன்னு விசாரி" என்றான் ஆகாஷ்.

கஜா செல்போனில் விஷ்வாவை அழைத்தான்.

## 19

**ஹோ**ட்டல் வைடூர்யாவின் அருகில் இருந்த ஒரு சந்தில் ஒதுங்கி நின்றுகொண்டிருந்தது அந்த ஆம்புலன்ஸ் வண்டி. அதற்குள் விஷ்வாவும், பாண்டியும் இருந்தார்கள்.

ஒலித்த போனை காதில் வைத்தான் விஷ்வா.

"என்ன கஜா?"



"ஈ.சி.ஆர்ல ஒரு கெஸ்ட் ஹவுஸ் சொன்னேனே... அங்க நானும் ஆகாஷ் சாரும் வந்து சேர்ந்துட்டோம்."

"வெரிகுட்..."

"உனக்கு அட்வான்ஸ் பணம் கிடைச்சுதா?"

"வந்துடுச்சு, சுஜா."

"இப்ப எங்க இருக்கே?"

"அந்த மஞ்சரி பொண்ணு தங்கியிருக்குற ஹோட்டல் பக்கத்துல வண்டியை நிறுத்திட்டு வெய்ட்டிங்ல இருக்கேன்."

"எதுக்கு வெய்ட்டிங்?"

"கொஞ்சம் சந்தடி அடங்கட்டும், சுஜா."

"கரெக்ட்டா செஞ்சிடுவே இல்ல?"

"முடியாதுன்னு நினைச்சா காசை வாங்கிருப்பேனா?"

"சரி, ஜாக்கிரதை. பாண்டியோட நீ புறப்படறப்போ ஒரு தடவை என்னைக் கூப்பிடு."

"ரைட்; சொன்னபடி வந்துடுவேன். கவலையேபடாத!"

செல்போனை அணைத்தான் விஷ்வா. நேரம் பார்த்தான். இரவு மணி 9:10.

"பாண்டி, நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கில்ல? சரியா செஞ்சிடுவியா?"

"செஞ்சிடுவேன், விஷ்வா."

"அப்போ... நான் புறப்படட்டுமா?"

"போ... நீ போன் செஞ்சதும் உடனே புறப்படறேன்."

"மடையா! ரெண்டு நிமிஷம் இடைவெளி விட்டுப் புறப்படணும்னு சொன்னேன்ல?"

"சரி, சரி... மறந்துட்டேன்."

"சொதப்பிடாதே!"

"உன் பங்குதான் பெருசு! நீதான் சரியா வேலை பார்க்கணும்."

"அதெல்லாம் நான் பாத்துக்கறேன். வர்றேன்."

ஆம்புலன்சிலிருந்து கீழே இறங்கிய விஷ்வா, வேறு அடையாளத்தில் இருந்தான்.

**ஹோ**ட்டல் வைடூர்யாவில் தன் அறையில் கட்டிலில் புரண்டு படுத்தாள் மஞ்சரி. அருகில் அண்ணி அம்சா படுத்திருக்க... தரையில் எக்ஸ்ட்ரா பெட்டில் அண்ணன் ஜீவா படுத்திருந்தான். இருவரும் உறங்கிப் போயிருந்தார்கள். அறையில் மெல்லிய ஒளியில் இரவு விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. கம்பளிப் போர்வையையும் மீறி ஏ.சி. குளிர் உடலை இலேசாக நடுங்க வைத்தது.

மறுபடி புரண்டு பழையபடி மல்லாக்கப் படுத்தாள் மஞ்சரி.

"என்ன மஞ்சரி, தூக்கம் வரலையா?" கிசுகிசுப்பான குரலில் கேட்டாள் அம்சா.

"ஆமாம். நீங்க தூங்கிட்ட மாதிரி இருந்துச்சே. இன்னும் தூங்கலையா?"

"நான் தூங்கிட்டுதான் இருந்தேன். நீ புரண்டு படுத்ததுல கட்டில் அசைஞ்சுதா... முழிச்சிட்டேன். இந்த ஏ.சி. வேற ரொம்பக் குளிருது."

"ஆமாண்ணி."

"கொஞ்சம் குறைக்கிறியா?"

"எப்படின்னு தெரியாதே. ஆனா அணைக்கத் தெரியும்."

"அணைச்சுடேன். ஃபேன் காத்து மட்டும் போதுமே."

போர்வையை விலக்கி எழுந்த மஞ்சரி ஏ.சி.யை அணைத்துவிட்டு, மின்விசிறியைப் போட்டுவிட்டு வந்து கட்டிலில் அமர்ந்தாள்.

"விடிஞ்சா கல்யாணம். எப்படித் தூக்கம் வரும்? கஷ்டம்தான்!" என்றாள் அம்சா.

"ஒரு மாதிரி பயமா இருக்கு, அண்ணி."

"அப்படித்தான் இருக்கும். நீ ரொம்ப அதிர்ஷ்டம் செஞ்சவம்மா. மாப்பிள்ளை பார்த்தியா, எவ்வளவு அன்பாப் பழகறாரு. அரை கிரவுண்டு நிலம் வெச்சிருக்கிற




வனே நம்மூர்ல அதிகாரமாப் பேசுவான்.

அவரோட அந்தஸ்துக்கும், படிப்புக்கும் கொஞ்சம்கூட பந்தா இல்ல."

"ஆமாம், அண்ணி."

இப்போது அறையின் கதவு தட்டப் பட்டது.

"யாரும்மா இந்த நேரத்துல?"

"தெரியலையே அண்ணி."

"ஓட்டல் பையன்கிட்ட உங்கண்ணன் தலைவலி மாத்திரை வாங்கிட்டு வரச் சொன்னாரு. இப்பத்தான் வர்றான் போலிருக்கு. நீ இரு; நானே திறக்கறேன்."

ஜீவா அசந்து உறங்கிக்கொண்டிருக்க... அறையில் பெரிய விளக்கைப் போட்டு விட்டுக் கதவுக்கு வந்தாள் அம்சா.

திறப்பதற்கு முன்பு, "யாரு?" என்றாள்.

"மாப்பிள்ளை குமரன் சார் அனுப் பிச்சாருங்க. அவரு கடையில வேலை பாக் கறவன் நான். ஒரு தகவல் சொல்லணுங்க" என்று வெளியிலிருந்து குரல் கொடுத்தான் விஷ்வா.

உள்ளே அவன் குரல் தெளிவாகக் கேட்க, மஞ்சரியும் அருகில் வந்தாள். கதவைத் திறந்தாள் அம்சா.

"தொந்தரவு செஞ்சிட்டேனா? மன் னிச்சிடுங்கம்மா. சாரு இங்க வந்திருந் தாரில்ல... இங்க அவரோட மணிபர்சை மறந்து விட்டுட்டாரான்னு கேட்கச் சொன்னாரு?"

"இங்க எதுவும் இல்லையே."

"சார் எங்கயோ தவற விட்டுட் டாருங்க. அதான் ஆளுக்கொரு பக்கமாத் தேடிட்டிருக்கோம். அதுல நிறைய கிரெடிட் கார்ட் எல்லாம் இருக்காம்."

"சரி, மஞ் சரி... மேஜையில, டிராயர்ல எல்லாம் பார்த்துடேன்."

அரையில் ஜீவா உறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண் டான் விஷ்வா.

"பாத்ரூமுக்குள்ளே கை கழுவ எதுக் காச்சும் போனாரா? அங்கயும் பார்த்துடுங் களேன்" என்றான்.

அம்சா இயல்பாகக் குளியலறைக்குள் சென்று தேட... இந்தத் தனிமை விநாடி களை எதிர்பார்த்துக் காத்திருந்த விஷ்வா, பேண்ட் பாக்கெட்டிலிருந்து வீரியமிக்க பூச்சிக் கால்லி மருந்து ஸ்ப்ரேயை எடுத்து சென்ட் அடிப் பதுபோல சட்டென்று மஞ்சரி யின் முகத்தில் மீண்டும் மீண்டும் அடித்தான்.

அவனது இந்தத் திடீர் செய்கையால் தடுமாறிய மஞ்சரி, பூச்சி மருந்து நெடி மூக்கில் தாக்க... உடனடியாக மயக் கம் ஏற்பட்டுச் சரிந்து தரை யில் விழுந்தாள். விஷ்வா பதற்ற மாகக் கத்தினான்.

"அய்யய்யோ! என்னாங்க! இங்க வாங்க! இவங்க பாருங்க... திடீர்னு மயக்கம் போட்டு விழுந்துட் டாங்க!"

அவனது அலறலில் சிவா விழித்து விட, குளியலறையிலிருந்து வந்த அம்சா பார்த்துப் பதறி... இருவரும் மஞ்சரியைத் தூக்கிக் கட்டிலில் கிடத்தினர்.

"பக்கத்துலயே நல்ல ஆஸ்பத்திரி இருக் குங்க, ஆம்புலன்சுக்கு போன் செய்யட் டுங்களா?" என்றான் விஷ்வா.

"பேச்சு மூச்சு இல்லாம கிடக்கறாளே! போன் பண்ணுப்பா" என்றாள் அம்சா.

விஷ்வா செல்போனில் பேசினான்.

இரண்டாவது நிமிடம் ஆம்புலன்சைக் கிளப்பிப் புறப்பட்டான் பாண்டி. மஞ் சரியை இவர்கள் லிஃப்டில் கீழேகொண்டு வரும்போது, ஆம்புலன்ஸ் சரியாக வந்து சேர... அதில் ஏற்றினார்கள்.

(தொடரும்)

"உன் மனைவி கட்டியிருக்கறது 'ரிவர்ஸிபிள்' சாரியா?"

"இல்லே. 'ரிடர்னபிள்' சாரி! அவ தங்கைகிட்டே இரவல் வாங்கிக் கட்டிட்டிருக்கா; திருப்பித் தரணும்."

- டி.என்.பாலகிருஷ்ணன்

மூலிகை மருந்து

# மனக்கட்டே கட்டும் உடலை!

பொதுவாக, நாளொன்றுக்கு ஓர் ஆண் 2800 கலோரி உணவும், ஒரு பெண் 2500 கலோரி உணவும் சாப்பிட்டால் போது மானது. இந்த கலோரி அளவைக் கவனிக்காமல் அதிகமாகச் சாப்பிடும் போது உடல் எடை அதிகரிக்கிறது. எண்ணெய், வனஸ்பதி, எண்ணெயில் வறுத்த உணவுகள், அதிகமான அரிசி, கிழங்குகள், இனிப்புகள் - ஆகியவற்றில் கலோரிகள் கூடுதலாக இருக்கும்.

உணவைக் குறைக்கிறேன் பேர்வழி என்று அதன் சமச்சீர் தன்மைக்குக் கேடு செய்துவிடலாகாது. கார்போஹைட்ரேட், புரதம், கொழுப்பு, நார்ச்சத்து, தாதுக்கள், வைட்டமின் என்று அனைத்துமே அன்றாடம் உடலுக்குத் தேவை. இவற்றின் அளவான கலவையைத் தேர்வு செய்து உண்பதில், கொஞ்சம் கவனமும் நிறைய மனக்கட்டுப்பாடும் அவசியம்.

புகைப்பிடிக்கும் பழக்கத்தைக் கைவிட முயற்சி செய்யும்போது சிலருக்கு உடல் எடை அதிகரிக்கும். அதற்காக, புகைப் பிடிப்பதைத் தொடர வேண்டும் என்று அர்த்தமில்லை! கட்டாயம் அதை நிறுத்தியே ஆக வேண்டும்; ஆனால் அதே சமயத்தில் உணவை நிறைய உண்ண ஓர் உந்துதல் ஏற்படும். அந்த உந்துதலைத்தான் கட்டுப்படுத்தியாக வேண்டும்.




உடற்பயிற்சியே இல்லாத வாழ்க்கை முறையும் எடை கூடுவதற்கு ஒரு முக்கிய காரணம்!

உடல் இளைப்பதற்கு ஆயுர்வேதம் யவை அரிசி எனப்படும் பார்லியை சிபாரிசு செய்கிறது. இது தவிர, இலங்கண சிகிச்சையும் (உபவாசம், மலசுத்தி போன்றவற்றை உள்ளடக்கிய வழிமுறைகள்) அளிக்கப்படுகிறது.

உடல் எடை விரைவாகக் குறைந்து போவதும் நல்லதல்ல; இன்னும் சொல்லப் போனால் அது ஆபத்தானது. இரண்டு வாரங்களில் ஒரு கிலோ என்ற விகிதத்தில் குறைந்து வரவேண்டும்.

குறுக்கு வழியிலோ, மாத்திரையை உட்கொண்டோ எடையைக் குறைக்க முடியாது. அவ்வாறு விளம்பரப்படுத்தப் படும் முறைகளை எச்சரிக்கையுடன் அணுகி ஆராய வேண்டும்.

பருமனைக் குறைக்க, முதல் காரியமாக கொழுப்புச் சத்து மிகுந்த எண்ணெய், நெய், சர்க்கரைப் பலகாரங்களைத் தவிர்க்க வேண்டும். அதே சமயத்தில் உடற்பயிற்சிகளை மேற்கொண்டு இடைவெளியின்றி தீவிரமாகச் செய்ய வேண்டும். இதனால் ஜீரண சக்தி ஒழுங்கு படுவதுடன் கழிவுகள் நன்கு வெளியேறி மூட்டுகள் சரியாக இயங்கும். நிறையத் தண்ணீர் குடிப்பதாலும் கழிவுகள் சுத்த மாக வெளியேறும். அதிகாலை வெறும் வயிற்றில் இரண்டு ஸ்பூன் தேன் கலந்த எலுமிச்சை சாறு பருகுவதும் இளைப்



பதற்கு உதவும்.

இலந்தை இலைகளைப் பறித்து, தண்ணீரில் ஊறவைத்து மறுநாள் காலை அத் தண்ணீரைப் பருகலாம் அல்லது இலைகளைத் தண்ணீரில் கஷாயமாகக் காய்ச்சிக் குடிக்கலாம்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் சேர்ந்த த்ரிபலாவை வெந்நீரில் கலந்து காலை வெறும் வயிற்றில் அருந்தலாம்.

புங்கம்பட்டை, வேங்கைப் பிசின் போன்றவற்றை நீரில் கலந்து பருகலாம்.

தவறாமல் தவிர்க்கப்பட வேண்டியவை மது, சிகரெட், பகல் தூக்கம். இந்த மூன்றும் உடலுக்குச் சத்ருக்கள்.

மிக அதிக எடையுடன் எமது மருத்துவமனைக்கு வந்தார் முத்துசாமி; வயது 35. எடை எவ்வளவு என்கிறீர்களா? அதை நான் சொல்ல மாட்டேன். படிகளை ஏறி உள்ளே நுழைவதற்கே மிகவும் சிரமப்பட்டார். 'மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கிற்று அவருக்கு' என்பதை மட்டும் சொல்கிறேன்.

முத்துசாமியைப் பரிசோதித்த பிறகு விடங்காதி சூரணம் (சுக்கு, நெல்லிக்காய் போன்றவை சேர்ந்தது) வ்யோஷாதி சூரணம் (சுக்கு, திப்பிலி, வாயுவிடங்கம் போன்றவற்றால் ஆனது) ஆகிய இரண்டையும் தேனுடன் சாப்பிடக் கொடுத்தேன். அதோடு, உத்வர்த்தனம் என்கிற உலர் மசாஜ் சிகிச்சையும் ஏற்பாடு செய்தேன். உணவில் கொள்ளு, பார்லி, சாமை, சோளம், பயறு, தேன் கலந்த நீர், தயிர்த் தெளிவு, வெண்ணெய் நீக்கிய மோர் போன்றவற்றைச் சேர்த்துக் கொள்ளச் சொன்னேன். அதோடு சிறு சிறு உடற்பயிற்சிகளும் கூடச் செய்தார். ஆறு மாதங்களில் அவருடைய உடல் பருமன் குறைந்தது.

உடற்பயிற்சிகளுள் நடை, நீச்சல் ஆகியன சிறந்தவை - உடல் இளைக்க உதவும். இவற்றைப் போன்ற விறுவிறுப்பான உடற்பயிற்சிகள் உடலின் கொழுப்பைக் கரைப்பதுடன், இரத்த ஓட்டத்தைச் சீராக்கி, இதயத்துக்கு வலு சேர்க்கின்றன.

7

உடலை இளைக்கச் செய்ய மனக் கட்டுப்பாடு மிகவும் முக்கியம் என்று சொன்னேன். சொல்வது ரொம்பச் சுலபம்; கடைப்பிடிப்பதோ ரொம்ப ரொம்பக் கஷ்டம். மனத்தைக் கட்டுப்படுத்த ஒரு வழி, சாப்பிட வேண்டிய அனைத்தையும் முதலிலேயே பெரிய தட்டில் அடுக்கிக்கொள்வது. இதனால், சாப்பாட்டைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒரு திருப்தி வந்துவிடும். சாப்பிடும் உணவுடைய மொத்த அளவும் ஒரு பார்வையில் புரிந்துபோகும்.

தட்டில் வைத்துக் கொண்டாயிற்றா...? இப்போது காய்கறி, கீரைகளை முதலில் சாப்பிடுங்கள். சாதத்துக்கு அதன் பிறகு வாருங்கள். இவ்வாறு செய்கிறபோது



உண்ணும் காய்கறியின் அளவு அதிகமாகி, சாதத்தின் அளவு குறையும்.

சமையல் - சாப்பாட்டில் ஒரு நாளைக்கு ஒரு நபருக்கு அதிகபட்சமாக 25 கிராம் எண்ணெய் / நெய்தான் சேரலாம். அதுவும் சன்ஃப்ளவர் ஆயில் அல்லது நல்லெண்ணெயாக இருப்பது தான் நல்லது.

இரு உணவுகளுக்கிடையே பசி எடுக்கிறாற்போல் இருந்தால் வெள்ளரிக்காய், காரட், பழம் என்று சாப்பிடுங்கள். பிஸ்கெட், பஃப், சமோஸா அல்ல! அரிசிப் பொரி, சுண்டல் நல்லது; முறுக்கு, சீடை, லட்டு, மைசூர்பாகு ஆகியவை சத்ருக்கள்! உடல் எடை குறையும் வரை இவற்றை வீட்டில் வாங்கி வைப்பதையே தவிர்க்கலாம்!

நார்ச்சத்து அதிகமுள்ள காய்கறிகள் - காலிஃப்ளவர், வாழைப்பூ, முருங்கைக் காய், நூல்கோல், கோஸ், கத்திரி, வெண்டை, புடலை, கீரை வகைகள், வாழைத்தண்டு, பீன்ஸ், காராமணி, தக்காளி - இவற்றை நிறையச் சாப்பிடுங்



கள். ஆனால் ஒரு நிபந்தனை - இவற்றை எண்ணெய், நெய், தேங்காய் சேர்க்காமல் சமைக்க வேண்டும். கிழங்குகள், நிலக் கடலை சிறிது காலத்துக்கு வேண்டவே வேண்டாம்.

சர்க்கரையைவிட வெல்லமும் தேனும் சிறந்தவை. அதற்காக இவற்றை அள்ளிச் சாப்பிட்டுவிடக் கூடாது. கவனத்துடன் பயன்படுத்த வேண்டும்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சீந்தில், முத்தங்காய் - இவை இளைப் பதற்கு உதவும்.

கொள்ளு, கொழுப்பை நன்கு கரைக்கும். கொள்ளைச் சுத்தப்படுத்தித் தண்ணீரில் ஊறப்போட்டு இரவில் வடித்தெடுத்து முளைகட்டச் செய்யவும். இதை அப்படியே சாப்பிடலாம்.

வேகவைத்த கொள்ளை வடிகட்டி, தண்ணீரைத் தனியே வைத்துவிட்டு மிக்ஸியில் கூழாக்கி, மறுபடி தண்ணீரைச் சேர்த்துக் கொதிக்கவிட்டு சூப் செய்யலாம். இதில் உப்பு, மிளகுப் பொடி சிறிதளவு நல்லெண்ணெயைச் சேர்த்தால் ருசியாக இருக்கும். பிடித்தால் எலுமிச்சை சாறு சேர்க்கலாம். தக்காளி, வெங்காயம், இஞ்சி, பச்சை மிளகாயைச் சேர்த்து வேகவைத்து ருசி கூட்டியும் இலவங்கம், பூண்டு, ஏலம் தாளித்து மணம் சேர்த்தும் அருந்தலாம்.

(தொடரும்)

## உடல் இளைக்க ஒரு மருந்து

விடங்காதி யோகம் - சுக்கு சூரணம் 10 கிராம், அயபஸ்மம் 10 கிராம், யவக்ஷாரம் 25 கிராம், வாயுவிடங்கம் - 100 கிராம், நெல்லிக்கனி சூரணம் - 100 கிராம், யவச் சூரணம் 100 கிராம்... இவற்றை நாட்டு மருந்துக் கடையில் கேட்டு வாங்கிக் கலந்து வைத்துக் கொண்டு, தினமும் ஐந்து கிராம் சாப்பிடலாம்.

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண் : 6

உணவைக் குறைக்க மனக்கட்டுப்பாடு கையாண்ட அனுபவத்தை இம்முறை எழுதுங்கள். தலைசிறந்த அனுபவத்தைத் தேர்வு செய்து டாக்டர் எல். மஹாதேவன் தன்வந்தரி வெள்ளி டாலர் பரிசளிப்பார். இரண்டாம் பரிசாக தேவமருந்து பகுதி -1 புத்தகம். அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி 11.12.06 தேதிக்குள் கல்கி அலுவலகத்துக்கு அனுப்பவும்.

**ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**



● எம்.ராஜலக்ஷ்மி மஹாதேவன்,
சென்னை - 92

*? "ஆட்சியில் பங்கு" என்று தமிழக காங்கிரஸ் கேட்டதற்கு, 'அது அவர்கள் பேச்சுரிமை' என்று தமாஷ் பண்ணியிருக்கிறாரே நமது முதல்வர்?*

! மேலிடத்தில் எழுதப்படாத உடன்படிக்கை இருக்கும்போது, முதல்வரின் பேச்சுரிமைக்கும் கிண்டலுக்கும் கேட்கவா வேண்டும்!

# அது என்னங்க, பார்ப்பனீயம்...?

● சே.தமிழரசி,
தென்கடப்பந்தாங்கல்

*? மனைவி அடித்தால் வலிக்காதாமே - உண்மையா?*

! அவர் செல்லமாக அடிக்கிறாரா, அல்லது கோபத்துடன் அடிக்கிறாரா என்பதைப் பொருத்தது அது.

● கு.அருணாசலம், தென்காசி

*? 212 ஏக்கர் பரப்பளவில் ஆசியாவிலேயே மிகப் பெரிய சிறை, 77 கோடி ரூபாய் செலவில், சென்னை அருகே (புழல்) கட்டப்பட்டுள்ளது சாதனையா? சறுக்கலா?*

! இரண்டுமல்ல. கைதிகளிடம் காண்பிக்கப்பட வேண்டிய மனிதாபிமானம் என்பது ஒன்று; இப்போதுள்ள மத்திய சிறைச்சாலை வளாகம் வேறு வளர்ச்சிப் பணிக்குப் பயன்படும் என்பது இரண்டு.

புதிய சிறைச்சாலை, ஆசியாவிலேயே பெரிய சிறைச்சாலை என்பதைவிட ஆசியாவிலேயே (நிர்வகிக்கப்படுவதில்) சிறந்த சிறைச்சாலை என்று பெயரெடுத்தால்தான் மகிழ்ச்சி கொள்ள முடியும்.

● பிழைக்க வழி...?

● ஜி.சிவப்பிரகாசம், கடலூர்

*? ஓமலூர் பள்ளி மாணவி சாவு விஷயத்தில் பள்ளி நிர்வாகிகளைக் கைது செய்யப் பயப்படும் காவல் துறை, பள்ளியைத் தாக்கியவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுத்தது சரியா?*

! பள்ளி நிர்வாகிகளைப் புகார் அடிப்படையில் கைது செய்யப் போதுமான ஆதாரங்கள் வேண்டும். பள்ளியைத் தாக்குவது என்பது பகிரங்கத் தவறு. தாக்கியவர்கள் பலவினப்பட்டுப் போகிறார்கள்.



• அணைபோட வியலாத...



• ... ஈகோ!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

*? கருணாநிதியும் ஜெயலலிதாவும் முல்லைப் பெரியாறு விவகாரத்திலும் தங்கள் பகைமையைக் காட்டிக் குழப்பத் தொடங்கிவிட்டார்களே...?*

! முல்லைப் பெரியாறு பிரச்னைகூட தீர வாய்ப்புண்டு; இந்த ஈகோ பிரச்னை தீரவே தீராது.

● மு.செந்தில் குமார், திருச்சி - 102

*? இந்தியப் பணக்காரர்கள் பட்டியலில் முதலிடத்தில் இருப்பவர்கள், தம்மிடம் உள்ள ஆயிரமாயிரம் கோடிகளில் ஏழைக் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் ஒருகோடி ரூபாய் வழங்கினால் நாடு முன்னேற்றம் அடைந்துவிடுமா?*

! ஆயிரமாயிரம் கோடி பணமாக யார் கையிலும் இராது; பல வடிவங்களில் அது சொத்தாக இருக்கும். பணக்காரனிடமிருந்து பிடுங்கி ஏழைக்குத் தந்து சமூக சமன்பாட்டை அடையவே முடியாது. ஏழையை வறுமைக் கோட்டுக்கு மேலே உயர்த்துவதுதான் ஒரே வழி.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

*? மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்திய நிர்வாகி பிருந்தா கராத், "இந்திய கிரிக்கெட் அணியில் கங்குலியைச் சேர்க்க வேண்டும். சேப்பலைப் பயிற்சியாளர் பொறுப்பிலிருந்து நீக்க வேண்டும்" என்றெல்லாம் கோரிக்கை வைப்பது சரியா?*

! எந்த ஒரு விளையாட்டிலும் எந்த ஓர் அணியும் அதன் எந்த ஓர் ஆட்டக்காரரும் மோசமாக ஆட வேண்டும் என்ற நோக்கில் ஆடுவதில்லை; வெற்றிக்குத்தான் பாடுபடுவார்கள். ஆனால் கிரிக்கெட் வேறு பல விளையாட்டுகளைப் போன்றது அல்ல. இதில் பயிற்சி, திறமையுடன் அதிர்ஷ்ட தேவதையின் ஒத்துழைப்பும் வேண்டும். அதனாலேயே எதிர்பாராத திருப்பங்கள் ஏற்பட, ஆட்டமும் சுவாரஸ்யமாகிறது. விளையாட்டு என்பது எல்லோரிடமும் நல்லெண்ணத்தை வளர்க்க வேண்டும்; விரோதத்தையல்ல.

● ஆர்.கோபாலன், சென்னை - 33

*? மக்கள் தொலைக்காட்சி சேனல் உங்கள் பார்வையில் எப்படி ஸார்...?*

! குத்துப்பாட்டு, ஆபாச சினிமாக்கள் இன்றி ஒரு தொலைக்காட்சியை நடத்த முடியும் என்று நிரூபித்திருக்கிறார்கள். ஆனால், பேட்டி காணச் சென்ற நமது நிருபரிடம் "நிதிப் பற்றாக்குறையால் சிரமமாக இருக்கிறது" என்று கூறியிருக்கிறார் ராமதாஸ். மக்கள் தொலைக்காட்சி மக்கள் ஆதரவு பெற்றால் விளம்பர ஆதரவும் கிடைக்கும்.

● லலிதா செல்லப்பா, பம்மல்

*? கலைஞர் அடிக்கடி பார்ப்பனியத்தை வெறுப்பதாகச் சொல்கிறாரே... அது என்னங்க பார்ப்பனியம்?*

! ஒரு கால கட்டத்தில் சமுதாயத்தில் நிலவிய, இன்று கருணாநிதியின் மனத்தில் மட்டுமே நீடிக்கிற பிராமண ஆதிக்கம்.

● வீர.செல்வம், பூம்புகார் ❐

*? திரைத்துறைக்குச் சலுகை மழை பொழியும் கலைஞர், மரபை மீறும் கதையுடன் வெளியாகும் சினிமாக்*

களைக் கண்டுகொள்ளாதது ஏன்?

! தலைப்பு தமிழில் வந்தால் தரமும் கூடவே வந்துவிடாது என்பதை மறந்ததால்தான். இவர்கள் தமிழை வளர்க்கவில்லை; சிறையில் அடைக்கிறார்கள்!

● ஆர்.லட்சுமி, மதுரை - 16 ★

? குழந்தைத் தொழிலாளர் எதிர்ப்புச் சட்டம் தற்சமயம் எந்த அளவில் பயனடைந்துள்ளது?

! அரசியல்வாதிகளுக்குப் பயன் தந்துள்ளது; மக்களுக்குத் தரவில்லை. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தால் இந்தச் சட்டத்துக்கு அவசியமே இராது. எந்தப் பெற்றோரும் குழந்தையைப் படிக்க வைக்க வேண்டும் என்றுதான் விரும்புவர்; வேலை செய்து சம்பாதித்து வரச் செய்ய வேண்டும் என்று ஆசைப்படமாட்டார்கள். வறுமைதான் குழந்தைத் தொழிலாளரை உருவாக்குகிறது.

● வீ. பெரியசாமி, தேலூர்

? வேலை இல்லாதவர்களுக்கு அரசாங்கம் தரும் நிவாரண உதவித் தொகை உண்மையில் தேவைதானா?

! உண்மையில் வேலை வாய்ப்புதான் தேவை. அரசு வழங்கும் ஒவ்வோர் உதவித் தொகையும் அதன் கையாலாகாத்தனத்துக்கு சாட்சியம். 'உனக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தர முடியவில்லை; அதற்குப் பதிலாக ஏதோ எங்களால் இயன்ற நஷ்ட ஈட்டைத் தருகிறோம்' என்று கூறுவதற்குச் சமம்!



● போராடும் டீ.வி.!



● கிரிக்கெட் அரசியல்

● ஆர்.கர்ணன், பெத்தரெங்கபுரம்

? நெற்றியில் திருநீறு பூசிக் கொள்வதோ குங்குமத் திலகம் இட்டுக் கொள்வதோ தி.மு.க. கொள்கைக்கு முரணானதாமே?

! கடமை, கண்ணியம், கட்டுப்பாடு கூட தி.மு.க. கொள்கைதான். இன்னும் எத்தனையோ! எல்லாவற்றையும் கடைப்பிடிக்கவா முடிகிறது? கண்டு கொள்ளாமல் இருந்துவிட வேண்டியதுதான்!

● கோவை எஸ்.திருமலை

? ஆன்மிகப் பத்திரிகைகள் பெருகப் பெருக, ஆதாரமற்ற 'ஆன்மிக'ச் சரடுகளும் பிற தெய்வங்களைத் தாழ்த்தித் தமது தெய்வத்தை உயர்த்திப் பேசும் செயல்களும் அதிகரித்து வருகின்றனவே...?

! ஆன்மிகத்தை மன அமைதிக்கும் செயலாக்கத்துக்கும் நாடுவதற்குப் பதிலாக வெற்றிக்கான குறுக்கு வழியாகக் கருதும் மக்கள் பெருகினால் பக்தியை நுகர்பொருளாக்கும் வியாபாரிகளும் பெருகுவார்கள்.

● ஜெ.மகேஸ்வரி, மதுரை - 4

? காதலுக்கும் காமத்துக்கும் வித்தியாசம் உண்டா?

! நிச்சயம் உண்டு. காதல் மெல்லுணர்வு; காமம் வல்லுணர்வு. முன்னது அவ்வப்போது பின்னதை உள்ளடக்கியதாக இருக்கும்; பின்னது முன்னதை உள்ளடக்காமலேகூட வெறியாட்டம் போடும். ●

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:
வீர.செல்வம்,
பல்லவனம்
பூம்புகார் அஞ்சல்,
சீர்காழி தாலுகா - 609 105

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
ஆர்.லட்சுமி
ஜே-8, மில் காலனி,
புது ஜெயில் ரோடு,
மதுரை - 625 016

## கலந்துரையாடல்

# பள்ளி

நாளைய சமுதாயத்தின் நம்பிக்கையாக இருப்பது நமது குழந்தைகள். பெற்றோரும், ஆசிரியர்களும் சமுதாயமும் அவர்களுக்கு நல்நினைவை, நல்லுணர்வை ஊட்டி நல்வழிப்படுத்த வேண்டும். ஆனால் பத்திரிகைகளைப் புரட்டினால், தொலைக்காட்சிப் பெட்டியைத் திருகினால் நமக்கு அதிருப்தியும், அதிர்ச்சியும்தான் ஏற்படுகின்றன.

• ஜெயராஜ்

• வையவன்

• கிரிஜா சேஷாத்ரி

'மாணவனுக்குத் தண்டனை', 'மாணவி அவமானத்தில் தற்கொலை முயற்சி', 'ஆசிரியர் தாக்கியதால் மாணவன் படுகாயம்', 'மாணவியரைப் பாலியல் பலாத்காரம் செய்ய முயற்சி' என்று கண் கொண்டு பார்க்க முடியாத செய்திகள்!

என்ன நடந்துகொண்டிருக்கிறது? அடுத்த தலைமுறையை அழகாக வார்க்காமல் இப்படி வதைப்பது ஏன்? இந்தச் செயலுக்கு யார் காரணம்? இதே நிலை வீட்டிலும், பள்ளியிலும் நடந்தால் என்னவாகும் - இந்த இளந்தளிர்களின் எதிர்காலமும் மனநிலையும்? என்ற பல்வேறு கேள்விகளின் தாக்கத்தாலும், ஆதங்கத்தாலும் 'கல்கி' ஒரு கலந்துரையாடலை ஏற்பாடு செய்திருந்தது.

எழுத்தாளரும், ஓய்வுபெற்ற ஆசிரியருமான வையவன், ஜெய்கோபால் கரோடியா மேல்நிலைப் பள்ளி முதல்வர் கிரிஜா சேஷாத்ரி, மனநல டாக்டர் நம்பி, 'துளிர்' தொண்டு நிறுவனத்தின் ஒருங்கிணைப்பாளர் நான்சி ஆகியோரும் பெற்றோர் சார்பில் தனியார் நிறுவனத்தில் பணியாற்றும் சா.ஜெயராஜூம் கலந்துரையாடலின் போது...

**கல்கி:** ஒருவரது மாணவப் பருவம் எப்படி அமைகிறதோ அதைப் பொருத்துத்தான் மொத்த வாழ்க்கையும் அமையும். பஞ்சு போன்ற மனநிலையில் உள்ள அந்தப் பருவத்தை நாம் சரியாகக் கையாள்கிறோமா?

**சா. ஜெயராஜ் (பெற்றோர்):** பெற்றோர்களாகிய நாங்கள் எங்கள் குழந்தைகளின் எதிர்காலத்துக்காகப் பணம் சேர்க்க முடியும்; நல்ல உணவு உடைகளை வாங்கித் தர முடியும். எங்களை விட அதிகநேரம் செலவிடும் பள்ளியில்

தான் அவர்களது எதிர்காலம் தீர்மானிக்கப்படுகிறது. அங்குள்ள ஆசிரியர்களின் மனநிலையும், பள்ளிச் சூழலுமே எங்கள் குழந்தைகள் வளர்வதற்கான நாற்றங்கால். அந்த நாற்றங்காலில் களையிருந்தால், விஷமுட்கள் இருந்தால் நாங்கள் என்ன செய்வது?

வையவன்: 'ஆசிரியப்பணி மிகப் பெரிய சமூகப் பொறுப்புள்ள பணி என்பதை நாங்கள்

டாக்டர் நம்பி

பள்ளிகளில் பண்புகளைச் சொல்லிக் கொடுத்தால்கூட அதற்கு மதர்தியான நிறம் கொடுக்கப்படுகிறது. இவ் விஷயத்தில் பெற்றோருக்கும் ஆசிரியர்களுக்கும் ஓர் இசைவு வேண்டியது அவசியம். குழந்தைகள் புத்திசாலிகள்தான்; அவர்களை நாம் வழிநடத்தும் முறையில்தான் பிரச்னை!

ஜெயராஜ்: ஒவ்வொரு குடும்பத்துக்

• நான்சி

• படம்: பொள்ளாச்சி சுந்தரம்

# மாணாக்கர் பலியாவது ஏன்?

மனமார உணர்ந்துள்ளோம். ஆனால் மாறிவரும் இந்தச் சமூகச் சூழலில் ஓர் ஆசிரியர், 'குரு' என்ற நிலையிலிருந்து சற்றுக் கீழிறங்கி வருவதையும் பார்க்க முடிகிறது. பெருகிவரும் சினிமாத் தனங்களும், தொலைக்காட்சி ஊடகங்களும் மாணவனை மாணவனாகவும், ஆசிரியரை ஆசிரியராகவும் இருக்க விடுவதில்லை.

கிரிஜா சேஷாத்திரி: முன்பு இருந்ததைப் போல இப்போது பள்ளிகளில் நீதிபோதனை வகுப்புகள் நடைபெறுவது கிடையாது. எங்கள் பள்ளியைப் போன்ற

கும் நடைமுறைப் பிரச்னைகள் இருக்கும். ஓரளவுதான் நாங்கள் புத்திமதிகளைச் சொல்ல முடியும். அவர்கள் கூடவே சென்று வர முடியாத நிலைமைதான் பெற்றோர்களுக்கு.

நான்சி: பண்புகள் மட்டுமே போதுமானதாகிவிடாது. அவர்களது வாழ்க்கைக்கான பாதுகாப்பு விஷயங்களையும் பாலியல் தொடர்பான விவரங்களையும் சொல்லித் தர வேண்டும்.

கிரிஜா: இதற்கென தனியாக ஒன்றும் சொல்லித் தர அவசியம் இல்லை என்றே நான் நினைக்கிறேன். உயிரியல் பாடத்

திலேயே இதைப் பற்றிய விவரங்கள் எல்லாம் உள்ளன.

**டாக்டர் நம்பி:** குழந்தைகள் வளர்வது ஒரு செடி வளர்வதைப் போலத்தான். நல்ல நிலம், நல்ல காற்று, நீர், பாதுகாப்பு இருந்தால் நல்ல செடி முளைக்கும். ஆக, குடும்பச் சூழல் நல்லவிதமாக அமைந்தால் குழந்தையும் நல்ல மனநிலையில் வளரும். உடல் வளர்ச்சி, மனவளர்ச்சி பாதிக்கப்படும் சூழல் ஏற்பட்டால்



அந்தக் குழந்தை பாதிப்புள்ள மனிதனாகவே பிற்காலத்தில் மாற வாய்ப்பு அதிகம்.

**கல்கி:** மாணவர்களைக் கண்டித்தல் என்ற பெயரில் தண்டித்தல், அடித்தல், கடுஞ்சொற்களைக் கூறிப் புண்படுத்துதல் எந்தவகையில் சரியாகும்?

**வையவன்:** ஓர் ஆசிரியரின் நோக்கம் சரியாக இருந்தால் அடிப்பதுகூட சில சமயங்களில் தவறில்லை. நான் எத்தனையோ மாணவ, மாணவிகளைக் கண்டித்தும், தண்டித்தும் உள்ளேன். 'அவர்களைத் துன்புறுத்துவது அல்ல என் நோக்கம், தவறை உணரச் செய்வதுதான்' என்பதைப் புரிந்து கொள்வார்கள். இப்போதும் என்னைக் கண்டால் மதிக்கிறார்கள். இதற்கென்ன சொல்கிறீர்கள்?

**கல்கி:** உங்கள் வாதத்தை ஒருவிதத்தில் ஏற்றுக் கொண்டால்கூட, தண்டிக்கும் இந்த நடைமுறையை ஆசிரியர்கள் விருப்பு வெறுப்பின்றிக் கையாள்வதில்லையே?

**கிரிஜா ஷேஷாத்ரி:** ஒன்றிரண்டு ஆசிரியர்கள் தவறு செய்யலாம். அவர்கள் விதிவிலக்குதானே தவிர பெரும்பான்மை இல்லை. என்னதான் குழந்தைகளைப் பற்றிய மனவியல் பாடங்களைப் படித்து ஆசிரியரானாலும் ஒரு சிலர் அளவுக்கு மீறி கடுமையாகத்தான் நடந்து கொள்கிறார்கள். ஆனால் குழந்தைகளும் முன்பு இருந்ததைப் போல கூட்டுக்குடும்பத்தின் சூழல் இல்லாமல், தனியாக வளர்ந்து மிகையான சென்சிட்டிவ் மனநிலையில் இருக்கிறார்கள்; ஒரு வார்த்தையைக்கூட அவர்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

**நான்சி:** அடிக்கக்கூடாது என்று சட்டமே உண்டு. தவிர, பள்ளிச்சூழல் சரியாக அமைந்தால் தனது சொந்தப் பிரச்னைகளைக்கூட மாணவர்கள் ஆசிரியர்களிடம் பகிர்ந்து கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்.

**வையவன்:** தடுக்கி விழுந்தால் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி. 'சும்மா இருக்கியா? டீச்சர் டிரெய்னிங் முடிச்சுவை' என்கிற நிலைமை! ஆசிரியத் தொழிலை விரும்பி வேலைக்கு வந்த காலம் மாறி நிர்பந்தத்தாலும், ஏதோ ஒரு வேலை வேண்டும் என்ற மனப்பான்மையால், இலஞ்சம் கொடுத்தும் ஆசிரியர் வேலைக்கு வருவோரிடம் தொழில் பக்தியை எப்படி எதிர்பார்க்க முடியும்?

**கிரிஜா:** தனியார்ப் பள்ளிகளில் மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் கவுன்ஸெலிங் உண்டு. இப்படி அரசுப் பள்ளிகளுக்கும் வர வேண்டும். பெற்றோர் - ஆசிரியர் ஓரியண்டேஷன் அவசியம். இவையெல்லாம் கட்டாயமாக்கப்பட வேண்டும்.

**வையவன்:** இந்த விஷயத்தை நான் பெரிதும் வரவேற்கிறேன்.

**நான்சி:** மாணவர்கள் பெரும்பாலும் பாலியல் ரீதியாகப் பாதிக்கப்படுவது, இது விஷயமாகப் போதுமான அறிவு இல்லாததால்தான். இதற்கான விழிப்புணர்வைப் பெற்றோர்கள் மாணவர்

களுக்கு வழங்க வேண்டும்.

**ஜெயராஜ்:** 'இலை மறையாகத் தானே சொல்ல முடியும்!

**டாக்டர் நம்பி:** இது ஒரு நாளில் முடிகிற விஷயமல்ல. தொடர்ந்து அவர்களை ஒரு நண்பனாகப் பாவித்து சொல்லிக்கொண்டே இருங்கள். அது தான் பெற்றோரின் கடமை. கத்தியை வைத்துக் கொலையும் செய்யலாம்; காய் கறியும் நறுக்கலாம். நாம் தெளிவு படுத்தும் விதத்தில்தான்எல்லாம் உள்ளது.

**கிரிஜா:** பெற்றோர்கள் இன்னொரு விஷயத்தில் தவறு செய்கிறார்கள். ஐந்தாம் வகுப்பு வரைக்கும் குழந்தைக்காகப் பள்ளியின் வாசலில் காத்துக்கிடக்கும் பெற்றோர்கள் ஆறாம் வகுப்பு வந்த பின்பு அவனைத் தனியாக விட்டு விடுகிறார்கள். தனிமையில் ஏங்கும் மாணவர்கள் பலருடைய மனவேதனையை நான் அநேக முறை பார்த்திருக்கிறேன்.

**நான்சி:** வீட்டில் தொடங்கி, பள்ளியில் ஆசிரியர், ஆயா ஏன் பள்ளியின் டிரைவர் வரையிலான ஒரு குழந்தைப் பாதுகாப்புக் கொள்கை உருவாக்கப் பட வேண்டும்.

**டாக்டர் நம்பி:** மறுபடியும் மறுபடியும் நான் சொல்வது, தொடர்புகளை உட்படுத்திய குடும்பச் சூழல் நன்றாக அமைந்தால் அந்தக் குழந்தை வளர்ந்து வரும் காலத்தில் எத்தனை தீயவை எதிரில் வந்தாலும் அத்தனையையும் தாண்டி நல்லவற்றை நோக்கி இயல்பாகவே வந்து விடும். வேர் பலமாக இருந்தால் செடி எப்படியும் பிழைத்துவிடும். மாறாக, கேடான குடும்பச் சூழல் கேடு விளைவிக்கும்.

**கிரிஜா:** இதற்குப் பெற்றோர்கள் வெறும் வார்த்தையாக இல்லாமல் வாழ்ந்து காட்ட வேண்டியது அவசியம்.

**கல்கி:** பெற்றோர்களாகிய நாம் செய்கிற ஒவ்வொரு செயலும் சிரிக்கிற சிரிப்பும், அழுகிற அழுகையும், சொல்கிற நிஜங்களும் மறைக்கிற பொய்களுமான வாழ்க்கை முறைகள் அத்தனையும் நம் குழந்தைகளைப் பாதிக்கும் என்பதை உணர வேண்டும்.

**நான்சி:** குழந்தைகளுக்கான எதிரான குற்றங்கள் நடைபெறும்போது, மீடியா குற்றவாளிகளைக் காண்பிப்பதைவிட, பாதிக்கப்பட்ட குழந்தைகளை அதிகம் எக்ஸ்போஸ் செய்கிறது. இதை உடனே நிறுத்த வேண்டும். பெற்றோர் குழந்தைகளுக்கு நம்பிக்கையைக் கற்றுத் தர வேண்டும்.

**கிரிஜா:** மாணவர்களின் கவனம் விளையாட்டு, கவின் கலைகளின் பக்கம் செலுத்தப்பட்டால் அருமையான பயன்கள் கிடைக்கும்.

**டாக்டர் நம்பி:** அன்போடு கூடிய கண்டிப்பு (தண்டிப்பல்ல) மாணவனை உன்னதமானவனாக மாற்றும்.

**வையவன்:** சினிமாவைத் தவிர, வக்கிரங்களைத் தவிர, வன்முறையைத் தவிர வேறெதையும் காட்டாத டீ.வி.க்களைப் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்காகத் தியாகம் செய்ய வேண்டும்.

**கல்கி:** பெற்றோரும், ஆசிரியர்களும், சமூகமும், அரசாங்கமும் எதிர்கால நம்பிக்கைகளான குழந்தைகளின் நலனை மேம்படுத்தும் விதமாகத் தீர்மானங்களை வரையறை செய்வோம். அதைக் கல்கி, அரசாங்கத்திடமும், பெற்றோர், ஆசிரியரிடத்தும் கொண்டு சேர்த்து மாணாக்கர் மீது நடக்கும் வன்முறைகளைத் தடுக்க முதல் தொடக்கமாகக் கொள்ளும்.



*(நிறைவேற்றப்பட்ட தீர்மானமும் அதற்கான ஆதரவுப் பட்டியலும் அடுத்த இதழில்)*

தொகுப்பு: **அருணா**

# ஞானம் பிறப்பது எப்போது?

ஆழ்வார்ப் பாசுரங்களில் யாப் பமைதி என்பதைப் பற்றி ஒரு தனிக் கட்டு ரையே எழுதலாம். யாப்பு என்பது மரபுக் கவிதை எழுதுவதற்கான விதிகளின் தொகுப்பு.

வெண்பா கட்டளைக் கலித்துறை போன்ற இறுக்கமான விதிகளைக் கொண்ட பாடல்களில், ஆழ்வார்கள் எளி மையாக விஷயங்களைச் சொல்லியிருப் பதைப் பார்க்கையில் யாப்பு ஒன்றும் அவ் வளவு கடினமானதன்று என்று தோன் றும்.

தமிழார்வமும் பக்தியும் சிறந்து கலந் தால்தான் இந்த எளிமை கிடைக்கும்.

சந்தக்கவி விருத்தம் என்றொரு பா வகை உண்டு. சிவவாக்கியர் பாடல் களிலும் திருமழிசை ஆழ்வார் பாடல் களிலும் இந்த வகையைக் கண்டுகளிக்க லாம். 'தானதந்த தானதந்த தானதந்த தானனா' என்று ஒவ்வொரு வரியும் துள்ளிக் குதிக்கும். இந்தச் சந்தத்தில் ஆழமான கருத்துகளையும் ஆழ்வாரால் சொல்ல முடிந்திருக்கிறது.

நீங்கள் வைணவக் கோயில்களில் பெருமாளைச் சேவிக்கச் சென்றிருந்தால், அர்ச்சகர் கற்பூரம் காட்டும்போது நின்ற திருக்கோலம், பள்ளிகொண்ட திருக் கோலம் அல்லது வீற்றிருந்த திருக்கோலம் என்று மூலவரை– பெருமாள் நிற்கிறாரா; படுத்துக் கொண்டிருக்கிறாரா; உட் கார்ந்திருக்கிறாரா என்பதை வருணிப் பார். உதாரணமாக, ஸ்ரீரங்கத்தில் பெருமாள் படுத்துக்கொண்டிருக்கிறார். திருவல்லிக்கேணியிலும் திருப்பதியிலும் நிற்கிறார். திருஊரகத்தில் நிற்கிறார்: பாடகத்தில் உட்கார்ந்திருக்கிறார்; திருவெஃகா என்ற காஞ்சிபுரத்தருகில் படுத்திருக்கிறார். இதை...

***நின்றது எந்தை ஊரகத்(து) இருந்தது***
***எந்தை பாடகத்து***
***அன்றுவெஃகணைக் கிடந்த(து)***
***என்இலாத முன்எலாம்***
***அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின்***
***மறந்திலேன்***
***நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என்***
***நெஞ்சுளே***

ஊரகம், பாடகம், வெஃகா எல்லாம் திருக்கோயில்கள். ஊரகத்தில் நிற்ப வரையும் பாடகத்தில் இருந்தவரையும் வெஃகாவில் படுத்திருப்பவரையும் தரிசித்தபோதெல்லாம் நான் பிறக்க வில்லை.

எனக்கு ஞானம் வந்ததும்தான் பிறந் தேன். பிறந்தபின் மறக்கவே இல்லை. இப்போது எனக்கு இந்தக் கோயில் களுக்குப் போகத் தேவையில்லை. என் மனதிலேயே அவர் நிற்கிறார்; உட்கார்ந் திருக்கிறார்; படுத்துக்கொண்டும் இருக் கிறார்.

ஞானம் பிறந்தபின் கோயில்களுக்குப் போகத் தேவையில்லை என்பது அற்புத



மான கருத்து. அது எப்போது பிறக்கும் என்பதுதான் கேள்வி! இது ஒருபுறமிருக்க, கோயிலுக்குள் சென்று கற்பூரம் காட்டும் போது வேறெங்கோ பார்த்துக்கொண்டிருந்தால் ஞானம் பிறக்கவே பிறக்காது. ●

8



# ப்ரிஸ்கிரிப்ஷன்

பதினான்கு வயதாகும் என் மகள், இன்னமும் சிறுகுழந்தை போல் தூக்கத்தில் சிறுநீர் கழித்து விடுகிறாள். ஆரம்பத்தில் தானாகச் சரியாகிவிடும் என்று விட்டுவிட்டோம். ஆனால் இப்பிரச்னை விட்டபாடில்லை. இதனால் வெளியூருக்கோ, உறவினர் வீட்டுக்கோ போக முடியாமல் தவிக்கிறோம். இதற்கு என்ன காரணம்? இப்பிரச்னைக்குத் தீர்வுதான் என்ன?

- எம்.ஜெயமாலனி, சென்னை

டாக்டர் கார்த்திக் குணசேகரன் (யூரோ கைனகாலஜிஸ்ட்) :

இரவு நேரத்தில் படுக்கையில் சிறுநீர் வெளியாகும் பிரச்னைக்கு NOCTURNAL ENURESIS என்று பெயர். ஐந்து வயதுக்குக் கீழ் உள்ள குழந்தைகளுக்கு சிறுநீர்ப் பைக்கும் மூளைக்கும் உள்ள தொடர்பு சரியாக இல்லாமையால் இப்பிரச்னை ஏற்படுகிறது. ஆனால் ஐந்து வயதுக்கு மேலும் இப்பிரச்னை தொடர்வது ஆபத்தானது.

பாரம்பரியம், அதிகமாகத் தூங்குதல், தொண்டையில் அடினாய்டு பிரச்னை, இளம் வயதில் சர்க்கரை வியாதி, அதிக சப்தத்துடன் குறட்டை விட்டுத் தூங்குதல், சிறுநீர்ப்பை தானாக இயங்கும் தன்மை, சிறுநீர்ப்பையில் பாதிப்பு, இரவு நேரங்களில் அளவுக்கு அதிகமாகத் தண்ணீர் குடித்தல் ஆகிய காரணங்களால் குறிப்பாகப் பெண்களையே இப் பிரச்னை குறிவைக்கிறது.

இதற்கு யூரோ கைனகாலஜி மருத்துவரை நாடினால் நல்ல தீர்வு உண்டு. இப்பிரச்னை எதனால் வருகிறது என்பதை யூரோ டைனமிக்ஸ் பரிசோதனை மூலம் கண்டறிந்து, தகுந்த மருத்துவ சிகிச்சை அளித்தால் எல்லாம் சரியாகிவிடும். அதிக கார உணவுகளைச் சாப்பிடாமல், இரவு நேரங்களில் அளவுக்கு அதிகமாக நீர்



## மஞ்சள் TO

அருந்துவதைத் தவிர்த்து, இரவில் அலாரம் வைத்து எழுந்து சிறுநீர் கழித்துவிட்டு வரும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்வது இச்சிகிச்சைக்குக் கூடுதல் பலன் அளிக்கும்.



டாக்டர். கார்த்திக் குணசேகரன்




• டாக்டர். ஆறுமுகம்



**என் பற்களின் நிறம் மஞ்சளாக இருப்பதால், வாய்விட்டுச் சிரிக்க முடியவில்லை. மனதுக்குக் கஷ்டமாக இருக்கிறது. என் பற்களை வெண்மையாக்க என்ன வழி டாக்டர்?**

**- மு. ஷர்மிளா, அண்ணாநகர்**

**டாக்டர் ஆறுமுகம் (பல் மருத்துவர்) :**

பல் சரியாகச் சுத்தப்படுத்தப் படாததாலும், பாரம்பரியம் மற்றும் பரம்பரை வியாதிகளின் காரணமாகவும் பற்கள் மஞ்சளாகக் காணப்படலாம். டென்டல் ஃப்ளோரோஸிஸ் எனப்படும் கெமிக்கல் கலந்த குடிநீரைக் குடிப்பதாலும், சிறுகுழந்தையாக இருக்கும்போது ஏற்படும் இன்ஃபெக்‌ஷனுக்கு Tetracycline எனப்படும் மருந்தைக் கொடுப்பதாலும்கூட பற்களின் நிறம் மஞ்சளாகக் காணப்படும்.

இதை இரண்டு முறைகளில் சரிப்படுத்தலாம். முதலாவது பற்களின் நிறத்துக்கேற்ப கெமிக்கலை கொண்டு 'ப்ளீச்சிங்' செய்வது. இந்த முறையால் பற்கள் வெண்மையானாலும் நிரந்தரமாகாது. சில வருடங்களுக்குப் பிறகு மீண்டும் 'ப்ளீச்சிங்' செய்ய வேண்டியிருக்கும். இரண்டாவது 'செராமிக் லேமினேட்' எனப்படும் நவீன சிகிச்சை முறை. இதன்மூலம் நிரந்தரமாகப் பற்களை வெண்மையாக்கலாம்.

> **கெமிக்கல் கலந்த குடிநீரைக் குடிப்பதாலும், சிறுகுழந்தையாக இருக்கும்போது ஏற்படும் இன்ஃபெக்‌ஷனுக்கு Tetracycline எனப்படும் மருந்தைக் கொடுப்பதாலும்கூட பற்களின் நிறம் மஞ்சளாகக் காணப்படும்.**

# வெள்ளை!

தொகுப்பு: **வினோ**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

ஸ்ரீ லலிதா

கண்ணை மூடிக்கொள் என்று சொன்னாலாவது இமைகள் உள்ளன - அவற்றை மூடுவதற்கு. காதுகளுக்கு என்ன பண்ணுவது?! பஞ்சை எடுத்து அடைத்து வைக்கலாம் என்றால் நாக்கை எப்படிக் கட்டுப்படுத்துவது? மேனியை முழுவதுமாக எப்படி மூடி வைப்பது?! சரி மேனியை மூடி விடலாம். பெரிய ஜமுக்காளத்தைப் போர்த்திக் கொள்ளலாம்; நாக்கைக் கூட கட்டுப்படுத்தலாம். ஆனால் மூக்கை எப்படிக் கட்டுப்படுத்து களாவே இருந்தார்களென்றால், புலன்களைக் கட்டுப்படுத்தினாலும் மனத்தைக் கட்டுப்படுந்த அவர்களால் இயலவில்லை!

மனத்தைக் கட்டுப்படுத்துவதுடன் புலன்களையும் கட்டுப்படுத்தியாக வேண்டும். கண்ணிடம் 'பார்க்காதே!' என்று சொன்னால் பார்க்காமல் இருக்காது! எதைப் பார்க்காதே என்று சொல்கிறோமோ அதைத்தான் பார்க்கும்!

# ஆட்கொள்ளும் சரணங்கள்!

வது? மூச்சு விட வேண்டுமா, வேண்டாமா?

சரி மூக்கைக் கூடக் கட்டுப்படுத்த, இழுத்துப் பிடித்துக் கொண்டு மூச்சு விடாமல் இருந்து விடலாம் என்றால், இதற்கெல்லாம் மேலாக ஒன்று இருக்கிறதே மனம் - அதை எப்படிக் கட்டுப்படுத்துவது?

இந்த ஐந்தையும் கூடக் கட்டுப்படுத்தலாம்; மனத்தை எப்படிக் கட்டுப்படுத்துவது?

'தவம் செய்தார்கள் தவம் செய்தார்கள்' என்று சொல்கிறோமே... ராக்ஷஸர்கள் கூட தவம் செய்தார்கள்!

தவம் செய்வது சுலபமல்ல; புலன்களைக் கட்டுப்படுத்தியாக வேண்டும். பசியைக் கட்டுப்படுத்துவதுகூட பரவாயில்லை; தூக்கத்தைக் கட்டுப்படுத்துவது ரொம்ப கடினமான விஷயம்! ஆனால், அதையும் கட்டுப்படுத்துவதில் வெற்றி கண்ட ராக்ஷஸர்கள் ஏன் ராக்ஷஸர்




விளையாட்டாக ஒருவர் சொல்வார்: பலராமையா என்று ஒருவர் - அவர் தான் சொல்லுவார் - "மருந்து சாப்பிடுகிற போது குரங்கை நினைத்துக் கொள்ளாமல் சாப்பிடு" என்று சொன்னால்... அதற்கு மேல் என்ன நடக்கும் என்பது நமக்கு நன்றாகவே தெரியும்!

ஒரு விஷயத்தைச் செய்யாதே என்று சொன்னால் அதைத்தான் செய்ய வேண்டும் என்பது மனித இயல்பு! இது படித்தவர்கள், படிக்காத சமூகம்; வளர்ச்சியற்ற சமூகம், புதிய சமூகம் என்று பாகுபாடின்றி அனைவருக்கும் பொது வான இயல்பு.

## குழந்தை மனம்

புதிதாகப் பெயின்ட் அடித்த இடத்தைப் பார்த்தாலே தெரியும் - பிசுபிசுப்பாக பெயின்ட் வாடையுடன் இருக்கும். அங்கே அறிவிப்புப் பலகை வேறு இருக்கும் - 'தொடாதீர்கள்' என்று. நாம் எல்லோரும் உடனே என்ன செய்வோம் என்பதை மனசுக்குள்ளேயே கொஞ்சம் நினைத்துப் பார்ப்போமே... அப்படி மனசுக்குள்ளேயே நினைத்துப் பார்த்தால், 'பெயின்டை இலேசாகத் தொட்டுப் பார்ப்போம்' என்பதை ஒப்புக் கொள்வோம். தொட்டுப் பார்த்துவிட்டு, "ஆமாம்! ஒட்டறது; காயல்லை" என்று வேறு சொல்வோம்! இதுதான் அடிப்

படை மனித இயல்பு. குழந்தையிடம் மட்டுமல்ல; எல்லா மனித மனங்களிலும் இந்தக் குழந்தைத்தனம் உண்டு. இந்தக் குழந்தைத்தனம் இருக்கிற வரையில்தான் மனித மனம் மனித மனமாக இருக்கும்.

ஆகவே செய்யாதே என்று மனித மனத்திடம் சொன்னால் அது கேட்காது. அப்படியானால் புலன்களை எப்படிக் கட்டுப்படுத்துவது? கண் தகாத விஷயங்களைப் பார்க்கக் கூடாது; காது தகாத விஷயங்களைக் கேட்கக் கூடாது; நாக்கு தகாத விஷயங்களைச் சுவைக்கக் கூடாது; மேனி தகாத விஷயங்களை தீண்டக் கூடாது. எப்படிக் கட்டுப்படுத்துவது?

"அம்மா! உன்னிடம் கொண்டு வந்து போட்டாயிற்று" என்று அந்த ஐந்து புலன்களையும் அவள் காலடியில் கொண்டு போய் போட்டாயிற்று என்றால், அம்பாள் என்ன பண்ணுகிறாள்... நாம் போடுவதற்குக் காத்திருக்காமல் அந்த ஐந்து புலன்களையும் ஐந்து அம்புகளாகத் தன் கரத்தில் வைத்திருக்கிறாள்.

இந்த ஐந்து புலன்களுக்கும் மேலே இருக்கக்கூடியது மனம். மனிதர்கள் பிற உயிரினங்களை விட உயர்ந்தவர்கள் என்கிறோம். மனிதன் என்ற சொல்லே மனம் என்பதிலிருந்து வந்ததுதான். மனஸ் இருக்கக்கூடியவன் மனிதன். நாய்க்கோ பூனைக்கோ மனம் இருக்கிறதா? அவை சிந்திக்குமா என்று கேட்டால் சிந்திக்கும் - ஆனால் ஒரு வரம்புக்குட்பட்டு மட்டுமே சிந்திக்கும். ஆனால் மனிதனுக்கு இருக்கக் கூடிய மன்மானது இது சரியா? இது தப்பா? இது எப்போதோ என்றைக்கோ நடந்ததா? இது ஏன் நடந்தது? என்று இத்தனை விஷயங்களையும் சிந்தித்துப் பார்க்கக்கூடிய தன்மையைக் கொண்டது. ஐந்து புலன்களையும் கட்டுப்படுத்துவது இந்த மனம்தான்!



### ஏன் கரும்பு?

ஒன்றும் வேண்டாம், ஒரு நல்ல விஷயம், ஒரு தீய விஷயம் - இரண்டும் இருக்கையில், "நல்ல விஷயம் வேண்டாம்; தீய விஷயம்தான் பிற்பாடு பார்க்கக் கிடைக்காது. ஆகவே அதைப் பார்த்துக் கொண்டிரு" என்று எது இயக்குகிறது? மனம்தானே! அப்படியானால், இறுதி இயக்கத்தின் கட்டுப்பாடு மனத்திடம் தான் இருக்கிறது.

> **"இயக்குகிற மனம் எங்கே இருக்கிறது என்பது தெரியாமலே மனித இனம் முழுவதையும் ஆட்டிப் படைத்துக்கொண்டிருக்கிறது."**

ஆனால் இந்த மனம் எப்படி இருக்கும் என்பது யாருக்கும் தெரியாது! என்ன வடிவம்? என்ன நிறம்? இதயத்தில் இருக்கிறதா? மூளையிலா? நெஞ்சுக்கூட்டிலா? எதுவும் தெரியாது! சிந்திப்பது மூளை என்பது மட்டுமே இன்று விஞ்ஞானரீதியாகத் தெரிகிறது. ஆனால், இயக்குகிற மனமோ, எங்கே இருக்கிறது என்பது தெரியாமலே மனித இனம் முழுவதையும் ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது. அந்த மனத்தைத்தான் அம்பாள் கரும்பு மாதிரி கையில் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறாள்.

ஏன் கரும்பு...?

கரும்பை இலேசாக வளைத்தாலே போதும்! அது நன்றாக மடங்கி வளையும்; அழுத்தி வளைத்தால் பட்டென்று



நேரடியாகச் சொல்ல மாட்டார் - 'ஷட்சரணதாம்' என்பார் - ''உன்னுடைய காலடியில் வந்து நான் விழுகிறேன். எப்படி விழுகிறேன்...? ஒரு வண்டு மாதிரி வந்து விழுகிறேன்'' என்பார். பஜ கோவிந்தம் பாடுகிறபோது அவர் என்ன சொல்லுவார்? 'குரு சரணாம் புஜ' என்பார். குருவினிடத்திலே போய்ப் போட வேண்டும் என்பார். எதைப் போட வேண்டும்?

அம்பிகைதான் குரு. பின்னால் வரப்போகிற நாமங்களில் இதைப் பார்க்கப் போகிறோம். ஆகவே அம்பாளிடத்தில் போட்டாலும் சரி; அந்த அம்பாளிடத்தில் நம்மை அழைத்துக் கொண்டு போகக் கூடிய ஆசார்யர்களிடத்தில் போட்டலும் சரிதான்.

''நான் வண்டாக வந்து உன் காலடியில் விழுந்து விட்டேன்'' என்பார் ஆதிசங்கரர். வண்டுக்கு ஆறு கால்கள். தமிழில் அதை அறுகாலி என்றே அழைப்பதுண்டு. இதிலே ஒரு கேள்வி கேட்கலாம் நாம். ''வண்டுக்கு ஆறு கால்கள் உள்ளனவே. மனிதர்களுக்கு இரண்டு கால்கள்தானே... 'நான் வண்டு மாதிரி வந்து விழுந்து விட்டேன்' என்று அவர் சொல்வதில் என்ன அர்த்தம்? இது நியாயமா?'' என்று நாம் கேட்கலாம்! ஏனென்றால் வண்டு என்று அவர் நேரடியாகச் சொல்லவில்லை - 'பிரமரம்' என்று வண்டைக் குறிக்கும் வார்த்தையைப் பயன்படுத்தவில்லை. 'ஷட்சரண தாம்' - அறுகாலி என்ற பொருளுடைய சொல்லைத்தான் பயன்படுத்துகிறார்! அந்தப் பெயரைப் பயன்படுத்த என்ன காரணம் என்றால், மனிதர்கள் ஆறு கால்களை உடையவர்கள் என்று அவர் உருவகப் படுத்துகிறார். இந்த ஆறு கால்கள் எவை - ஐந்து புலன்களும் மனமும்!

உடைந்து போகும்! இந்த மனமும் அப்படித்தான். அதை வளைக்கவும் வேண்டும்; அதே சமயத்தில் சரியாகப் பயன்படுத்தவும் வேண்டும்.

## குரு வடிவினள்

ஆதிசங்கர பகவத்பாதர் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் சௌந்தர்ய லஹரியைப் பாடினார் என்று சொன்னோம் - **பஞ்சதன்மாத்ர ஸாயகாவாக, மனோரூபேக்ஷு கோதண்டாவாக** அவள் இருக்கக்கூடியவளிடத்தில் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு விஷயத்தைச் சொல்வார். ரொம்ப அழகான விஷயம் அது :

''அம்மா! நான் என்னுடைய புலன்களைக் கொண்டு வந்து உன்னுடைய காலடியில் போடுகிறேன்'' என்பார்.

(தொடரும்)



# ரெண்டு

**கொ**ஞ்ச நாளுக்கு முன்னாடி ஸ்ரீரங்கத்துல ஒரு கல்யாண மண்டபம் இப்பிடிச்சு எறிஞ்சு, பலர் பலியானாங்க இல்லையா? அதான் இந்தப் படத்தோட அடிநாதம். காரைக்குடியில எடுக்கப்பட்டிருக்கிற அந்தக் கல்யாண ஃப்ளாஷ்பேக் காட்சிகள் நிஜமாவே கண்ணுக்குள்ள நிக்குது. சோகம், சந்தோஷம், எள்ளல், துள்ளல்னு மிக வசிகரமான காட்சிகள்.

மாதவனுக்கு ரெட்டை வேடம். குறும்பு, க்ரைம்னு பின்னி யெடுத் திருக்கார். வடிவேலு உதை வாங்கவே பொறந்த கட்டை. இதிலும் வாங்கி வாங்கி பாக்கெட்ல போட்டு நம்மளைப் பாடாய்ப்படுத்தறார். ரீமாசென்னுக்கும் புதுமுகம் அனுஷ்காவுக்கும் மாதவனைக் காதலிக்கறதைத் தவிர வேற ஒண்ணும் பெருசா வேலையில்ல. பார்ட் பார்ட்டா ஆட்டோவை விக்கறது, குரங்குக் கடிக் கூத்து, தேவதர்ஷினியோட ஞாபக மறதி, சந்தானத்தோட 'அக்கா' ஃபார்முலான்னு படத்துல சிரிக்க மகிழ ஏகப்பட்ட ஐட்டம்ஸ். பாக்யராஜ் போலீஸ் அதிகாரியா வர்றார், யோசிக்கிறார், கரெக்டா கொலையாளிய மிஸ் பண்றார்.





கலை இயக்குநர் ஜனாவோட பொருட்காட்சி செட் மிரட்டுது. பிரசாத்தின் ஒளிப்பதிவில் பாடல்கள் குளிர்ச்சி. இமான் இசையில் 'குறையொன்றுமில்லை' பாட்டு இதம். கண்ணு தெரியாத மாதவன், பர்ஃபெக்டா கொலைகள் செய்யறதா காட்டப்படறது நம்பும்படியா இல்ல. கவர்ச்சி ரொம்ப தூக்கலா இருக்கு, பெண்களும் வரணுமா, வேணாமா? சுந்தர் சி. படம்னாலே ஜாலியாகப் பார்க்கலாம்னு ஆகிப் போச்சு. அதை இந்தப் படமும் நிரூபிச்சாச்சு!

**- லஜ்ஜாவதி**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.